

## திருசிற்றம்பலம்

**அறுபத்து நான்கு சிவவடிவங்கள்** என்பது சைவர்களின் இறைவனான **சிவபெருமானின்** அறுபத்து நான்கு வடிவங்களாகும். இதனை *சதுஷஷ்டி மூர்த்திகள்* என்று சமசுகிருத மொழியில் அழைப்பர்.

## 64 வடிவங்கள்

*அஷ்டாஷ்ட விக்கிரக லீலை* எனும் கேசி முனிவரின் நூலில் சிவபெருமானின் அறுபத்து நான்கு வடிவங்களும், அவ்வடிவங்களின் மூலம் அடியார்களுக்கு சிவபெருமான் அருளியமையும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஈக்காடு *இரத்தினவேலு முதலியாரின் சிவபராக்கிரமம்* எனும் தமிழ் நூலிலும் இந்த அறுபத்து நான்கு வடிவங்கள் கூறப்பட்டுள்ளன.

சதாசிவ வடிவத்தின் ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோசாதம் போன்ற ஐந்து முகங்களிலிருந்து, முகத்திற்கு ஐந்தாக இருபத்தியைந்து வடிவங்கள் தோன்றின. இவை மகேசுவர மூர்த்தங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இந்த மகேசுவர மூர்த்தங்களுடன் வேறு சில வடிவங்களும் இணைந்து அறுபத்து நான்கு வடிவங்களாக குறிப்பிடப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| 1 | இலிங்க மூர்த்தி | இலிங்கமாக தோன்றிய வடிவம் |
| 2 | இலிங்கோத்பவ மூர்த்தி | இலிங்கத்தில் தோன்றிய வடிவம் |
| 3 | முகலிங்க மூர்த்தி | இலிங்கத்தில் சிவமுகம் உள்ள வடிவம் |
| 4 | சதாசிவ மூர்த்தி | ஐந்து முகத்துடன் உள்ள வடிவம் |
| 5 | மகா சதாசிவ மூர்த்தி | இருபத்தியைந்து முகத்துடன் உள்ள வடிவம் |
| 6 | உமாமகேஸ்வர மூர்த்தி | உமையுடன் பொருந்திய வடிவம் |
| 7 | சுகாசன மூர்த்தி | நல்லிருக்கை நாதர் |



| | | |
|---|---|---|
| 8 | உமேச மூர்த்தி | உமையுடன் நின்றருளும் வடிவம் |
| 9 | சோமாஸ்கந்த மூர்த்தி | உமை மற்றும் கந்தன் உடனாகிய வடிவம் |
| 10 | சந்திரசேகர மூர்த்தி | பிறை சூடியுள்ள வடிவம் |
| 11 | இடபாரூட மூர்த்தி | விடையேறி - காளையின் மீது அமர்ந்திருக்கும் வடிவம் |
| 12 | இடபாந்திக மூர்த்தி | அறவெள் விடைக்கு அருளிய வடிவம் |
| 13 | புஜங்கலளித மூர்த்தி | பாம்புகளைக் காத்து அருளிய வடிவம் |
| 14 | புஜங்கத்ராச மூர்த்தி | பாம்புகளை அடக்கிய வடிவம் |
| 15 | சந்த்யான்ருத்த மூர்த்தி | மாலைநேர நடன வடிவம் |
| 16 | சதாநிருத்த மூர்த்தி | எஞ்ஞான்றும் நடனமாடும் வடிவம் |
| 17 | சண்டதாண்டவ மூர்த்தி | காளி காண ஆடிய நடன வடிவம் |
| 18 | கங்காதர மூர்த்தி | கங்கையணிந்த வடிவம் |
| 19 | கங்காவிசர்ஜன மூர்த்தி | முடியிலிருந்து கங்கையை விடுவிடுக்கும் வடிவம் |
| 20 | திரிபுராந்தக மூர்த்தி | முப்புரமெரி செய்த வடிவம் - முப்புரமெரித்த வடிவம் |



| | | |
|---|---|---|
| 21 | கல்யாணசுந்தர மூர்த்தி | மணவழகர் வடிவம் |
| 22 | அர்த்தநாரீஸ்வர மூர்த்தி | உமைபங்கன் - உமையை இடப்பாகமாகக் கொண்டவன் |
| 23 | கஜயுக்த மூர்த்தி | காயாசுரனை கொன்ற வடிவம் |
| 24 | ஜ்வாரபக்ன மூர்த்தி | சுரம் நீக்கும் வடிவம் |
| 25 | சார்த்தூலஹர மூர்த்தி | புலியினை அழித்த வடிவம் |
| 26 | பாசுபத மூர்த்தி | அருசுனனுக்கு பாசுபதக் கணையை அளித்த வடிவம் |
| 27 | கங்காள மூர்த்தி | வாமனை கொன்று முதுகெழும்பினைக் கொண்ட வடிவம் |
| 28 | கேசவார்த்த மூர்த்தி | மாலொரு பாகர் வடிவம் |
| 29 | பிச்சாடன மூர்த்தி | பலிகொள் செல்வர் வடிவம் |
| 30 | சரப மூர்த்தி (சிம்ஹக்ன) | சரப வடிவம் |
| 31 | சண்டேச அனுக்ரஹ மூர்த்தி | சண்டேசருக்கு அருளிய வடிவம் |
| 32 | தட்சிணாமூர்த்தி | தென்முகக் கடவுள் |
| 33 | யோக தட்சிணாமூர்த்தி | தவநிலைத் தென்முகக் கடவுள் |



| | | |
|---|---|---|
| 34 | வீணா தட்சிணாமூர்த்தி | வீணையேந்திய தென்முகக் கடவுள் |
| 35 | காலந்தக மூர்த்தி | காலனைக் கொன்ற வடிவம் |
| 36 | காமதகன மூர்த்தி | காமனை எரித்த வடிவம் |
| 37 | இலகுளேஸ்வர மூர்த்தி | புவனங்கள் தோறும் எழுந்தருளும் வடிவம் |
| 38 | பைரவ மூர்த்தி | பைரவர் |
| 39 | ஆபத்தோத்தரண மூர்த்தி | முனிவர்களின் இடர் களைந்த வடிவம் |
| 40 | வடுக மூர்த்தி | முண்டாசுரனை கொன்ற வடிவம் |
| 41 | சேத்திரபால மூர்த்தி | ஊழிக்காலத்தில் உலகைக் காத்த வடிவம் |
| 42 | வீரபத்ர மூர்த்தி | வீரபத்திரர் |
| 43 | அகோர மூர்த்தி | சத்தந்துவை கொன்ற வடிவம் |
| 44 | தட்சயஞ்யஹத மூர்த்தி | தக்கன் வேள்வியை தகர்த்த வடிவம் |
| 45 | கிராத மூர்த்தி | வேட்டுருவர் |
| 46 | குரு மூர்த்தி | மாணிக்கவாசகருக்கு அருளியது |
| 47 | அசுவாருட மூர்த்தி | குதிரையேறு செல்வர் |



| | | |
|---|---|---|
| 48 | கஜாந்திக மூர்த்தி | ஐராவதத்திற்கு அருளிய வடிவம் |
| 49 | சலந்தரவத மூர்த்தி | சலந்தரனைக் கொன்ற வடிவம் |
| 50 | ஏகபாதத்ரி மூர்த்தி | ஒற்றை திருவடியுடைய மும்மூர்த்தி வடிவம் |
| 51 | திரிபாதத்ரி மூர்த்தி | மூன்று திருவடியுடைய மும்மூர்த்தி வடிவம் |
| 52 | ஏகபாத மூர்த்தி | ஒற்றை திருவடியுடைய வடிவம் |
| 53 | கௌரிவரப்ரத மூர்த்தி | உமைக்கு பொன்னிறம் அளித்த வடிவம் |
| 54 | சக்கரதான மூர்த்தி | திருமாலுக்கு சக்கரம் அளித்த வடிவம் |
| 55 | கௌரிலீலாசமன்வித மூர்த்தி | உமையுடன் கேளிக்கைகள் புரிந்த வடிவம் |
| 56 | விசாபகரண மூர்த்தி | நீலகண்டர் |
| 57 | கருடன் அருகிருந்த மூர்த்தி | கருடனுக்கு அருளிய வடிவம் |
| 58 | பிரம்ம சிரச்சேத மூர்த்தி | பிரம்மாவின் தலையை கொய்த வடிவம் ( அயனின் ஆணவச் சிரமறுத்த வடிவம்) |
| 59 | கூர்ம சம்ஹார மூர்த்தி | கூர்ம வடிவ திருமாலை அடக்கிய வடிவம் |
| 60 | மச்ச சம்ஹார மூர்த்தி | மச்ச வடிவ திருமாலை அடக்கிய வடிவம் |



| | | |
|---|---|---|
| 61 | வராக சம்ஹார மூர்த்தி | வராக வடிவ திருமாலை அடக்கிய வடிவம் |
| 62 | பிரார்த்தனா மூர்த்தி | உமையின் ஊடலைத் தணித்த வடிவம் |
| 63 | இரத்த பிட்சா பிரதான மூர்த்தி | தேவர்களின் செருக்கினை அடக்கிய வடிவம் |
| 64 | சிஷ்ய பாவ மூர்த்தி | முருகனிடம் பிரணவப் பொருளைக் கேட்க மாணவனாக மாறிய வடிவம் |

## வகைப்பாடு

இந்த அறுபத்து நான்கு சிவவடிவங்களும் போக வடிவங்கள், யோக வடிவங்கள், கோப வடிவங்கள் (வேக வடிவங்கள்) என மூன்றாக பிரிக்கப்பட்டுள்ளன.

### போக வடிவம்

- உமாமகேஸ்வரர்
- சந்திரசேகரர்
- ரிஷபாரூடர்
- மாதொருபாகர்

### யோக வடிவம்

- தட்சிணாமூர்த்தி
- ஞான தட்சிணாமூர்த்தி
- யோக தட்சிணாமூர்த்தி
- வீணா தட்சிணாமூர்த்தி
- சுகாசனர்

### கோப வடிவம்

- கங்காளர்
- வீரபத்திரர்
- திரிபுராந்தக மூர்த்தி
- கஜயுக்த மூர்த்தி
- காலந்தக மூர்த்தி



## பிற சிவ வடிவங்கள்

64 சிவ வடிவங்கள் தவிர்த்து எண்ணற்ற சிவவடிவங்களை புராணங்கள் கூறுகின்றன. சைவ சமயக் கலைக் களஞ்சியம் கஜாரி, கஜமுக அனுக்கிரக மூர்த்தி, இராவண அனுக்கிரக மூர்த்தி, ஹரிவிரிஞ்சதாரணர், ஏகதசருத்திரர், முயலகவத மூர்த்தி, சர்வ சம்ஹாரர், யக்ஞேசுவரர், உக்கிரர் ஆகியவற்றை பட்டியலிடுகிறது.

## மகேசுவர மூர்த்தங்கள்

**மகேசுவர மூர்த்தங்கள்** என்பவை சைவக் கடவுளான சிவபெருமானின் இருபத்து ஐந்து உருவங்களைக் குறிப்பதாகும். இந்த வடிவங்கள் சிவனது அறுபத்து நான்கு 64 சிவவடிவங்களிலும் இடம்பெருகின்றன.

இவ்வடிவங்கள் சிவாலயங்களில் கற்சிலைகளாகவும், பஞ்சலோக சிற்பங்கள் மற்றும் சுதைச் சிற்பங்களாகவும் வடிவமைக்கப்பட்டுள்ளன.

## வகைப்பாடு

சிவாகமங்கள் சிவபெருமானின் 5 முகத்திற்கும் 5 மூர்த்திகளை முன்நிறுத்துகின்றன. இவ்வாறான இருபத்தைந்து மூர்த்தங்களும் மகேசுவர மூர்த்தங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

- ஈசானம் - சோமாஸ்கந்தர், நடராஜர், ரிஷபாரூடர், சந்திரசேகரர், கல்யாணசுந்தரர்
- தற்புருஷம் - பிட்சாடனர், காமசம்ஹாரர், சலந்தராகரர், கால சம்ஹாரர், திரிபுராந்தகர்
- அகோரம் - கஜசம்ஹாரர், வீரபத்திரர், தட்சிணாமூர்த்தி, நீலகண்டர், கிராதர்
- வாமதேவம் - கங்காளர், கஜாரி, ஏகபாதர், சக்ரதானர், சண்டேசர்
- சத்யோசாதம் - இலிங்கோத்பவர், சுகாசனர், அர்த்தநாரீஸ்வரர், அரியர்த்த மூர்த்தி, உமா மகேஸ்வரர்



## மகேஸ்வர மூர்த்தங்களின் பட்டியல்

மகேஸ்வர வடிவங்கள், அமைந்திருக்கும் தலங்கள் அடைப்புக்குறிக்குள் மாவட்டங்கள்

1. சோமாஸ்கந்தர் - திருவாரூர்
2. நடராஜர் - சிதம்பரம்
3. ரிஷபாரூடர் - வேதாரண்யம்
4. கல்யாணசுந்தரர் - திருமணஞ்சேரி
5. சந்திரசேகரர் - திருப்புகலூர் (திருவாரூர்)
6. பிட்சாடனர் - வழுவூர் (நாகப்பட்டினம்)
7. காமசம்ஹாரர் - குறுக்கை
8. கால சம்ஹாரர் - திருக்கடையூர் (நாகப்பட்டினம்)
9. சலந்தராகரர் - திருவிற்குடி
10. திரிபுராந்தகர் - திருவதிகை (கடலூர்)
11. கஜசம்ஹாரர் - வழுவூர் (நாகப்பட்டினம்)
12. வீரபத்திரர் - கீழ்ப்பரசலூர் என்ற திருப்பறியலூர் - (நாகப்பட்டினம்)
13. தட்சிணாமூர்த்தி - ஆலங்குடி (திருவாரூர்)
14. கிராதகர் - கும்பகோணம் (கும்பேஸ்வரர் கோயில்)
15. கங்காளர் - திருச்செங்காட்டங்குடி( திருவாரூர்)
16. சக்ரதானர் - திருவீழிமிழலை (திருவாரூர்)
17. கஜமுக அனுக்கிரக மூர்த்தி - திருவலஞ்சுழி (திருவாரூர்)
18. சண்டேச அனுக்கிரகர் - கங்கைகொண்ட சோழபுரம் (அரியலூர்)
19. ஏகபாதமூர்த்தி - மதுரை
20. லிங்கோத்பவர் - திருவண்ணாமலை
21. சுகாசனர் - காஞ்சிபுரம்
22. உமா மகேஸ்வரர் - திருவையாறு (தஞ்சாவூர்)
23. அரியர்த்த மூர்த்தி - சங்கரன்கோவில் (திருநெல்வேலி)
24. அர்த்தநாரீஸ்வரர் - திருச்செங்கோடு (நாமக்கல்)
25. நீலகண்டர் - சுருட்டப்பள்ளி( ஆந்திரா)



# 1.லிங்க மூர்த்தி



லிங்கம் விளக்கம்: நம்முடைய புராணங்களும், வேதங்களும் பரசிவத்தை கீழ்கண்டவாறு விவரிக்கின்றது. மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐம்புலன்களும் இல்லாதது. மனம்,சொல்,செயல் இவற்றிற்க்கு மேல் வேறொரு <உயர்வான நிலை இல்லை எனுமளவிற்கு உயர்ந்தது. உருவமற்றது. ஆகவே இன்னதென நம்மால் சுட்டிக்காட்ட இயலாதது. அதுவே அனைத்துமானது, பற்பல குணாதிசயங்களைக் கொண்டது. நிறமில்லாதது, அழிவென்பதே இல்லாதது, ஈரேழு உலகங்களும் தோன்ற, அழிய காரணமாயிருப்பது, இதுதான் எனக் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய நிலையை நமக்கு கொடுக்காதது. இத்தகைய நம் அனைவரையும் இயக்க வைக்கும் சக்தியை நாம் பரமசிவம் என்றால் எல்லோரும் அறிந்தது என பொருள் படும்.

மேற்சொன்னவாறு ஐம்புலனில்லாத எட்டாத நிலையைக் கொண்ட, இதற்கு மேல்



வேறொரு உயர்ந்த நிலையினை சுட்டிக்காட்ட முடியாத, உலகம் தோன்ற, அழிய காரணமான இதனை உருவம் உள்ளது, அதாவது சகளம் என்றும், உருவமற்றது அதாவது நிட்களம் என்றும் பிரிக்கலாம். மேற்ச்சொன்ன சகலநிட்கள நிலையையே நாம் லிங்கம் என்போம். லிங்கம் சிவரூபம் அதாவது மேலேயுள்ளது. அது பொருந்தியிருக்கும் பீடம் சக்தி வடிவமாகும். பொதுவாக லிங்கத்தை ஞான சக்தியின் மறுவடிவமாக கொள்ளலாம். இத்தகைய ஞான சக்தியின் மறுவடிவமான லிங்க உருவமே சிவபெருமானின் உடலாகும். லிங்கம் மூவகைப்படும் . அவ்வியக்தம், வியக்தம், வியக்தாவியக்கம். இதில் கை, முகம் வெளிப்படாமல் இருப்பது அவ்வியக்தம், வெளிப்படுவது வியக்தம். அருவுருவத் திருமேனியுடையது வியக்தாவியக்தம். சிவலிங்கத்தின் உருண்டையாக இருக்கும் பகுதி ருத்ரபாகம் என்றழைக்கப்படும். பீடத்தின் கீழாக உள்ள நான்கு மூலையும் பிரம்ம பாகம் என்றழைக்கப்படும். பீடத்தில் லிங்கம் பொருந்தியுள்ள எட்டு மூலையும் திருமால் பாகம் என்றழைக்கப்படும். ருத்ரபாகம் ஆணாகவும், திருமால் பாகம் பெண்ணாகவும் பிரமபாகம் பேடு எனவும் குறிக்கப்படும்.

கன்ம சாதாக்கியம் என்பதற்கேற்ப லிங்கத்தின் நடுவே சதாசிவனும், மேற்கே ஈசனும், வடக்கே பிரம்மனும், தெற்கே திருமாலும், கிழக்கே ஈசனும் அமைந்திருக்கின்றனர். இத்தகைய சிறப்பு பெற்ற லிங்கத்தைப் பற்றி மகாலிங்க தலம் எனும் சிறப்புப் பெற்ற ஊர் மயிலாடுதுறை அருகே உள்ள இடைமருதூர் ஆகும். இங்கு சிவபெருமான் தானே லிங்கம் அமைத்து, தானே பூஜித்து, பூஜைக்குறிய வழிமுறைகளை வகுத்தும் தந்துள்ளார். இங்கு காவிரி நதி வில்வத்தால் சிவனைப் பூஜித்தாள். நம்மிடமுள்ள மும்மலங்களை அகற்றும் வல்லமையுடையவர் இவர். பிரமஹத்தி தோஷ பரிகார தலமாகும். வில்வார்ச்சனையும், தயிர் அன்ன நைவேத்தியமும் செய்தால் மூளை, மனம் சம்மந்தப்பட்டவை தீரும். அக உடல் தூய்மையடையும். இறைவன் பெயர் மகாலிங்கேஸ்வரர். இறைவி பெயர் பெருநலமுலையம்மையார் என்பதாகும்.



# 2. இலிங்கோற்பவ மூர்த்தி



நான்முகனுக்கு இரண்டாயிரம் சதுர்யுகம் ஒரு நாளாக உள்ளது. ஒருமுறை நாள் கணக்கு முடிந்து உறங்க சென்றார். உடன் தேவலோகத்தினரும் மகலோகம் சென்றனர். அப்பொழுது பெரும் கடற்பெருக்குத் தோன்றி உலக உயிர்கள் அனைத்தையும் அழித்தது. அதனால் உலகம் மறைந்து விட்டது. திருமால் ஒரு ஆலிலைமேல் சின்னஞ் சிறிய குழந்தை வடிவத்துடன் உறங்கினார். இதனை கண்ணுற்ற அனைவரும் குழந்தையை ஆராதித்தனர். ஆராதனையைக்கேட்டு எழுந்த திருமால் பழைய உலகைத் தேடினார். அது பாதாளத்தில் இருப்பதைக் கண்டார். உடன் வராக அவதாரம் எடுத்து தனது கொம்பினால் குத்திக்கொண்டு வந்து முறைப்படி நிறுத்தினார். பின் பாற்கடலில் நித்திரையில் ஆழ்ந்தார். இதனிடையே நான்முகனுக்கு இரவு நீங்கி பகல் ஆரம்பமானது. அனைத்து தேவ மாந்தர்களையும் ஈரேழுலகங்களையும் திரட்டி இந்திரனையும் சபை நிறுத்தி



அரசாள செய்தார். இடையில் ஏற்பட்ட சம்பவம் தெரியாததால் , இந்த உலக இயக்கம் தன்னாலே எனக் கர்வம் கொண்டார். தானே முழுமுதற்கடவுள் என்ற எண்ணத்துடன் உலகை வலம் வரும் போது பாற்கடலில் யோக நித்திரையில் திருமால் இருப்பதைக் கண்டு அவரிடம் சென்று நீ யார்? என வினவினார். அவரோ நான் உனது தந்தை என்றார், இதனால் பெரும் வாக்குவாதம் இருவருக்கும் ஏற்பட்டது. அது யார் பெரியவர் என்றளவில் பெரும் போரானது. இப் போரினால் உலக உயிர்கள் அனைத்தும் வாடின. உடன் நாரதர் தோன்றி நீங்களிருவருமே பெரியவர் கிடையாது. சிவபெருமானே அனைவருக்கும் பெரியவர் என்றுரைத்தார். மேலும் இனியும் போர் தொடர்ந்தால் ஜோதிரூபமாக சிவபெருமான் தோன்றுவார் என்று கூறி மறைந்தார். இருப்பினும் விடாமல் போர் தொடர்ந்தது. சிறிது நேரத்திற்குப் பின் பெரும் ஜோதி தோன்றியது, அதிலிருந்து அசரீரீ கேட்டது. உங்கள் இருவரில் எவர் எனது அடியையும், முடியையும் கண்டு வருகிறிர்களோ அவர்களே பெரியவர் என்று அசரீரீ கூறியது. உடன் நான்முகன் அன்னமாக மாறி முடியைத் தேட, திருமால் வராகமாக மாறி அடியைத் தேட இரண்டுமேக் கிடைக்கவில்லை. இருவரும் சிவனே சரணம் என்று சிவனை அடைந்தனர். மனம் வருந்தினர். உடன் இருவரும் ஒன்றாக அங்கே ஒரு சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்து பூஜித்தனர். உடனே சிவபெருமான் தோன்றி இருவரிடத்திலும், நான்முகன் என் வலதுபுறத்திலும், திருமால் என் இடதுபுறத்திலும் தோன்றியவர்கள் எவனே எனக்கு இருவரும் ஒன்றே என்றுக்கூறி மறைந்தார். வானுக்கும் பூமிக்குமாக நின்ற ஜோதி வடிவம் சிறிது சிறிதாக குறைந்து மலையாக மாறியது. அதுவே திருவண்ணாமலையாகும். அவர்கள் இருவரும் வணங்கிய சிவலிங்கமே லிங்கோர்பவர் ஆகும்.

திருவண்ணாமலையில் அருணாச்சலேஸ்வரர் ஆலயத்தில் இருக்கும் லிங்கோத்பவரை வணங்கினால் நாம் செய்த அனைத்துக் குற்றங்களும் மறைந்து விடும். இனி குற்றம் செய்யும் எண்ணம் வராது. நமக்கு வேண்டிய அனைத்தையும் அளிக்க வல்லவர். இங்கு பௌர்ணமி கிரிவலம் மிக விசேஷமானது. மேலும் இவரை வணங்க சூரியகிரகணத்தால் உண்டாகும் அனைத்து பிரச்சினைகளும் விலகும். மேலும் வென்னிற நந்தியாவர்த்தம் மலரால் அர்ச்சனையும், சாதம் அல்லது பால் நைவேத்தியமும் பௌர்ணமி அன்று கொடுக்க சித்தம் தெளிவடையும் . மேலும் இங்குள்ள சிவபெருமானுக்கு குளிர்ச்சியான நல்லெண்ணையில் அபிசேகம் செய்தால் வெப்பநோய்கள் நீங்கும்.



# 3. முகலிங்க மூர்த்தி




சிவலிங்கத்திற்கென தனியானதொரு கீர்த்தி உண்டு எனலாம். சிவலிங்கத்தில் முகம் இருந்தால் நாம் அதை முகலிங்கம் என்போம். அத்தகைய முகலிங்கம் நான்கு வகைப்படும். அவை ஆட்யம், அநாட்யம், சுரேட்டியம், சர்வசமம் என்பனவையாகும். இதில் ஆடயம் என்பது 1001 லிங்கமுடையது. சுரேட்டியம் என்பது 108 லிங்கமுடையது. அநாட்டிய , சுரேட்டிய லிங்கங்கள் திருமுகங்களைப் பெறாதவையாகும்.சர்வசமம் என்பது ஐந்து முக வேதங்களைப் பெறும். ஈசானம், தத்புருடம், அகோரகம், சத்யோஜாதம், வாமமம் என ஐந்தும் அடங்கும். முகலிங்கம் எதை விளக்குகிறது எனில் விளக்கும் ஒளியும் போல பிரிக்க முடியாத இறைவன் உள்ளார் என்று விளக்குகிறது. பிரம்ம, விஷ்ணு, ருத்ர, மகேஸ்வர, சதாசிவமே முகலிங்கம் எனப்படுகிறது. இந்த ஐவரும் ஐந்தொழில்களை நடத்துகின்றவர். இவற்றிற்கு ஆதார சக்தியாக உள்ளவன் இறைவன் அவனையே நாம்



முகலிங்கத்தின் மூலமாக தரிசிக்க முடியும்.

முகலிங்க மூர்த்தியை தரிசிக்க நமக்கு மூன்று இடங்கள் அமைந்துள்ளது.

1. திருவக்கரை
2. கச்சபேஸ்வரர்
3. கொட்டையூர்

இதில் திருவக்கரையில் அமைந்துள்ள சங்கரமௌலீஸ்வரர் கோயிலில் முகலிங்கமூர்த்தி சிறப்பு பெற்றது. எப்படியெனில் சதுரமான அடி பாகத்தின் மீது அமைந்துள்ள வட்ட வடிவமான ஆவுடையாரின் மேல் மும்முகத்துடன் மூலவர் காட்சிக்கொடுக்கிறார். இங்குள்ள கோயில் தீர்த்தத்தில் நீராடி வில்வத்தால் அர்ச்சிக்க விரோதிகள் ஒழிந்து நட்பு பாராட்டுவர், இல்லையெனில் சிவனின் கட்டளைக்குக் கீழ்ப்படியும் வக்கிர காளியம்மன் அவர்களை கண்டிப்பாள். என்று நம்பிக்கை நிலவுகிறது. மேலும் பிரதோஷ காலங்களில் தும்பைப் பூ அர்ச்சனையும், சுத்த அன்னம் நைவேத்தியமும் செய்ய நல்வாழ்வு கிட்டும் என்பது உறுதி. மேலும் காஞ்சியிலுள்ள கச்சபேஸ்வரர் கோயிலிலும் முகலிங்கம் உள்ளது. மற்றொன்று கும்பகோணம் அருகே அமைந்துள்ள கொட்டையூரில் உள்ளது. இங்குள்ள முகலிங்க மூர்த்தி மிகுந்த சக்தி வாய்ந்தவர். அவரை சக்கரையால் அபிஷேகம் செய்தால் அனைத்திலும் ஜெயம் உண்டாகும் என்பது ஐதீகம்.



# 4. சதாசிவ மூர்த்தி



சடாமுடியிடன் காட்சியளிக்கும் இவர் ஐந்து திருமுகங்களைக் கொண்டவர் ஆவார். தலைக்கு இரண்டாக பத்துக் கைகளைக் கொண்டவர். இவறுடைய வலக்கையில் சூலமும், மழுவும், கட்வங்கமும், வாளும், பீஜா பூரகமும், வச்சிரமும், அபயமுத்திரையும் கொண்டு காட்சியளிக்கும். இடக்கையில் நாகம், பாசம், நீலோற்பலம், அங்குசம், டமருகம், வரதம், மணிமாலை, பரிவட்டம் எனக்காணப்படும். இவர் ஸ்படிக நிறத்துடன் காட்சிக்கொடுப்பவர். மேலும் தியான பூஜைக்காக சகளத்திருவுருவத்துடன் காட்சியளிப்பவர். இவரது இடைப்பாகத்தில் சதாசிவனும், மேற்கே ஈசனும், வடக்கே பிரமனும், தெற்கே திருமாலும், கிழக்கே ஈசனும் அடங்கியுள்ளனர். இம் முர்த்திகள் ஐவரும் அடங்கியள்ள நிலையை நாம் கன்மசா தாக்கியம் என்போம். இத்தகைய பெருமைகளைக் கொண்டவர் சதாசிவ மூர்த்தியாவார். சாந்த சொருபீயான இவரே அனைத்திற்கும் காரணகர்த்தாவாவார். இந்த மூர்த்தி ஈசானம், தத்புருடம், வாமம், அகோரம், சத்யோஜாதம் முதலான ஐந்து திருமுகங்களுடன் எழுந்தருளியிருப்பவர். முனிவர் கௌசிகரின் பொருட்டு இவரது சத்யோகஜாத முகத்திலிருந்து காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம்

என்னும் ஐந்து ஆகமங்களை அருளினார்.

காசிபமுனிவருக்காக வாமதேவ முகத்திலிருந்து தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம் என்ற ஆதமங்களை அருளினார். பரத்வாஜருக்காக அகோரமுகத்திலிருந்து விசயம், நீச்சுவாசம், சுவயம்புவம், ஆக்நேயம், வீரம் ஐந்து ஆகமங்களையும் அருளினார். கௌதம முனிவரின் பொருட்டு தத் புருட முகத்தினின்று ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிஷ்பம் என்ற ஐந்து ஆகமங்களையும் அருளினார். முடிவில் அகத்தியருக்காக ஈசான முகத்திலிருந்து புரோத்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பரமேச்சுவரம், கிரணம், வாதுளம் எனும் எட்டு ஆகமங்களையும் அருளினார். இவரை தரிசிக்க நாம் செல்ல வேண்டிய தலம் சிதம்பரமாகும். இங்குள்ள கோயில் பிரகாரத்தில் ஐந்து பீடங்கள் உள்ளன. இங்கே சதாசிவமூர்த்தி அருளிபாலிக்கிறார். இங்குள்ள சிவகங்கைத் தீர்த்தத்தால் அபிசேகம் செய்து வில்வ இலை அர்ச்சிக்க அனைத்து மூர்த்திகளையும் வணங்கிய, அர்ச்சித்த பலன் கிடைக்கும். மேலும் சோமவாரத்தில் மிளகு சீரக சாதத்தால் நைவேத்தியம் செய்ய மறுபிறவியில்லை எனும் நிலையை அடையலாம். இங்குள்ள சிவபெருமானை திருநீரால் அபிசேகம் செய்ய சகல நன்மையும் உண்டாகும்



# 5. மகா சதாசிவ மூர்த்தி



இவர் கைலாயத்தில் இருப்பவர். இவர் இருபத்தி ஐந்து தலைகளும், ஐம்பது கைகளையும் கொண்டவர். எனவே இவரை நாம் மகா சதாசிவ மூர்த்தி என்கிறோம். அந்த கைலையில் இவரைச் சூழ்ந்தவாறே இருபத்தி ஐந்து மூர்த்திகளும் உள்ளனர். மேலும் இவரைச் சூழ்ந்தவாறு ருத்ரர்களும், சித்தர்களும், முனிவர்களும் உள்ளனர். அனைவருமே மகாசதாசிவ மூர்த்தியை வணங்குகின்றனர். இவரை புராணங்கள் கைலாயத்தில் உள்ளவராகச் சொல்கின்றன. மேலும் மகா கைலாயத்தில் இருந்து கொண்டு அனைத்து உயிர்களுக்கும் அருள் பாலித்து அனுக்கிரகம் செய்வதால் இவரை அனுக்கிரக மூர்த்தி என்றேக் கொள்ளுதல் வேண்டும். மேலும் இவரை இன்ன உருவம் தான் எனக் கூற முடியாது. அனைத்தும் கலந்த திருமேனியுடையவர் என புராணங்கள் கூறுகின்றன. இவரை நாம் தரிசிக்க செல்ல வேண்டிய தலம் காஞ்சிபுரமாகும். காஞ்சிபுரத்தில் அமைந்துள்ள இவரை கோயிலுள் காண முடியாது. சுரகரேஸ்வரர் கோயில் விமானத்தில் சுதை சிற்பமாகத்தான் காண முடியும். மேலும் பல கோயில் விமானங்களில் தான் தரிசிக்க முடியும்.



இவரை வணங்கினால் சிவ தரிசனம் விரைவில் கைகூடும் என்பது ஐதீகம். மேலும் கடுமையான காய்ச்சலால் அவதிப்படுபவர்கள் கருப்பஞ்சாறால் இவரை அபிசேகம் செய்தால் கடும் காய்ச்சல் நீங்கி தேகம் ஆரோக்கியம் பெறும் என்றும் கூறப்படுகிறது





# 6. உமா மகேச மூர்த்தி



திருக்கைலையில் பொன்னும் மணியும் சேர்ந்து அமைந்த ஆசனத்தில் சிவபெருமான் தமது தேவியுடன் எழுந்தருளியுள்ளார். சிவபெருமானே உலக உயிர்கள் அனைத்திற்கும் தந்தையாவார். அதுபோல உமாதேவியே உலகத்திலுள்ள அனைத்து உயிர்களுக்குமே அன்னையாக விளங்குபவள். அவர் தன்னுடைய இறைவனாகிய சிவபெருமானின் என்னபப்படியே அனைத்துச் செயல்களையும் செய்து வருகின்றார். பூவிலிருந்து மணத்தையும், நெருப்பிலிருந்து புகையையும் எப்படி பிரிக்க முடியாதோ அதுபோல் இவர் சிவத்திடம் ஐக்கியமானவராவர். கருணையே வடிவான இவர் ஐவகை செயல்களுக்காய் ஐவகை பேதங்களாக மாறியுள்ளார். முறையே

1. பராசக்தி- இவர் பரமசிவத்திலிருந்து 1001 கூறு கொண்டவர்.
2. ஆதிசக்தி - பராசக்தியில் 1001 கூறு கொண்டதாகும்.
3. இச்சா சக்தி - ஆதிசக்தியில் 1001 கூறு கொண்டதாகும்.
4. ஞானசக்தி - இச்சா சக்தியில் 1001 கூறு கொண்டதாகும்.



5. கிரியாசக்தி - ஞானசக்தியில் 1001 கூறு கொண்டதாகும்.

இதில் பராசக்தி பக்குவமடைந்த ஆன்மாக்களை அனுக்கிரகிக்கிறவள். ஆதிசக்தி நம்மிடமுள்ள ஆணவங்களைப் போக்கி பக்குவ நிலையைக் கொசடுப்பவர். ஞானசக்தி ஞானத்தை ஊட்டி நம்மிடம் ஞானத்தை ஒளிரும் படி செய்பவர். இச்சா சக்தி திருஷ்டித் தொழில் செய்து நம்மை சிருஷ்டிப்பவர். கிரியாசக்தி உலகப் படைப்பை செய்பவர். மேற்க்கண்ட இந்த ஐந்து சக்திகளும் ஒன்றினைந்து ஒரு செயல் செய்யும் போது ஒன்றாகி சதாசிவமூர்த்தியாகி விடுகின்றது. எனவே சிவன் - சக்தி பிரிக்க முடியாத ஒன்று. இத்தகைய சிறப்பு வாய்ந்த உமா மகேஸ்வர மூர்த்தியை நாம் தரிசிக்க வேண்டிய தலம் கும்பகோணம் அருகேயுள்ள கோனேரி ராஜபுரம் தான் செல்ல வேண்டும். இங்கு கோயில் கொண்ட மூர்த்தியே உமாமகேஸ்வரர் ஆவார். இறைவி பெயர் தேகசௌந்தரி என்பதாகும். இங்குள்ள தீர்த்தத்தில் நீராடி இறைவி, இறைவனுக்கு இளநீர், பால், தேன் அபிசேகம் செய்ய கடுமையான குஷ்ட நோயும் தீரும். இத்தல இறைவனின் மற்றொரு திருநாமம் பூமிநாதர் என்பதாகும். பெயர்க்கேற்றார் போல் எந்த ஒரு தொழில் செய்யும் முன்பும் இந்த பூமிநாதரை வணங்கி இங்கிருந்து ஒரு பிடி மண் கொண்டு வந்து தொழில் செய்யும் இடத்தில் வைத்தால் தொழில் சிறப்படையும். புதன் தோறும் சிவப்பு அல்லிப்பூவால் அர்ச்சனையும், சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியமும் செய்து வழிபட்டால் குடும்ப வாழ்வில் எந்தவொரு பிரச்சனையும் வராது. இருந்தாலும் விலகும்.இங்குள்ள மண்ணால் வினாயகர் செய்து நம் வீட்டில் வைத்து வழிபட எந்தவொரு காரியத்தடையும் அகலும்.



# 7. சுகாசன மூர்த்தி



வெள்ளிமலையின் மீது கண்களைக் கூசச் செய்யும் ஒளி கொண்ட நவரத்தினங்களால் அலங்காரம் செய்யப்பட்ட ஆயிரங்கால் மண்டபம் உள்ளது. அதில் ஜோதி மயமான சிவபெருமான் நடுவே நாயகனாக வீற்றிருக்க, அவரைச் சுற்றிலும் மும்மூர்த்திகளும் தேவகணங்களும், தேவலோக வாழ் அனைத்துமே அங்கே கூடியிருக்கின்றன. சிவபெருமானிடம் வேண்டிய வரங்களைக் கேட்க அவரும் வேண்டும் வரங்களை தந்தபடியே இருக்கிறார். நேரம் கடந்தது. அனைவரும் தங்களது பணிக்கு, இருப்பிடத்திற்கு திரும்பி விட்டனர்.

சற்றைக்கேல்லாம் உமாதேவியார் அங்கே பிரசன்னமாகி இறைவனின் தால் பணிந்து எம்பெருமானே சிவாகமங்களின் உண்மைகளை, விளக்கங்களையும் எனக்கு புரியும் படி தாங்கள் கூற வேண்டும் என்று கேட்கிறார். உடன் சிவபெருமான் சிவாகமங்களின் உண்மைகளையும் , விளக்கங்களையும், ஐவகை பந்த பாசங்களின் நிலையையும், அவற்றை நீக்கினால் கிடைக்கும்



நன்மைகளையும், சிவாகமங்கள் பற்றிய அனைத்து வினாக்களுக்கும் விடையளிக்கின்றார். அச்சமயம் அவர் சுகாசன நிலையில் அமர்ந்த படி உறைக்கிறார். அருகே உமாதேவியார் நின்று கொண்டுள்ளார். சுகாசன நிலையில் சிவகாமங்களைப் பற்றி உறைத்த காரணத்தால் இவரை நாம் சுகாசன மூர்த்தி என்கிறோம். இவரது கரங்களில் மான், மழு உள்ளது. தேவியார் அருகே இல்லை.

இத்தகைய சுகாசன மூர்த்தியை தரிசிக்க நாம் செல்ல வேண்டிய தலம் சீர்காழியாகும். இங்கு கோயில் கொண்டுள்ள இறைவனது திருநாமம் பிரம்மபூரிஸ்வரர், சட்டைநாதர், தோணியப்பர் என்று மூன்று திருநாமங்களை உடையவர். இறைவியின் திருநாமம் பெரியநாயகி யாகும். இங்கு அருள்பாலிக்கும் சுகாசன மூர்த்தியை மனமுருக வேண்டி அர்ச்சிக்க வியாழன் சார்ந்த அனைத்து குறைகளும் தீரும். மேலும் தொழில் துறை நிர்வாகம் நல்ல முறையில் நடைபெற இவர் நமக்கு அருள்புரிவார். வில்வ அர்ச்சனையும், கற்கண்டு நைவேத்தியமும் சோமவாரங்களில் செய்தோமானால் நிர்வாகம் செழிப்பாகும். மேலும் இங்குள்ள சிவபெருமானுக்கு உகந்த அபிசேகம் பலாப்பழத்தால் செய்யப்படுகிறது. இதனால் யோக சித்திகள் கைகூடும் என்பது ஐதீகம்.



# 8. உமேச மூர்த்தி



முன்பொருமுறை நான்முகன் படைத்தல் தொழிலுக்கு நான்கு புதல்வர்களை தன்னுடைய தவ சக்தியால் உண்டாக்கினார். அந்த நால்வரும் படைத்தல் தொழிலை மேற்க்கொள்ளாமல் தவச்சாலையை நோக்கிச் சென்றுவிட்டனர். பின்னர் நான்முகன் விஷ்ணுவை கானச்சென்றார். அவர்தம் குறைகளைச் சொன்னார். இக் குறைகளைப் போக்குபவர் சிவபெருமான் ஒருவரே, எனவே அவரைச் சென்று பார்ப்பதே உசிதமென நான்முகன், விஷ்ணு, நான்கு புதல்வர்கள் சகிதம் வெள்ளிமலையை அடைந்தனர். அவர்களை நெற்றிக்கண்ணால் சிவபெருமான் நோக்க, அவர்களனைவரும் எரிந்து சாம்பலானார்கள். அப்பொழுது தனிமையில் இருந்த சிவபெருமான் தன் தோளைப்பார்க்க அவரது சக்தியே உமாதேவியாக வடிவம் கொண்டு வெளிவந்தது. உடன் உமாதேவியை தன் இடபுறமாக இருக்க செய்தார். பின்னர் எரிந்து சாம்பலானவர்களை முன் போலவே படைத்தார். அவர்கள் அனைவரும் இவர்கள் இருவரையும் வணங்கி நின்றனர். இருவரது அகமும் மகிழ்ந்ததால் அவர்கள் அனைவரும் கேட்ட வரத்தினைக் கொடுத்தார். உலகமே செழித்தது. உலகிலுள்ள அனைத்து உயிர்களையும்



படைத்து, காத்து, துயர்துடைத்து அனைத்தையும் வாழவைக்கும் சக்தியை உமையவளாக இடது பாகத்தில் வீற்றிருந்தக் கோலத்தைக் கண்டவர்கள் ஆனந்தப்பட்டனர். ஆகவே சிவபெருமானது பெயர்களில் உமேச மூர்த்தியும் சேர்ந்துக் கொண்டது. பொதுவாக சிவபெருமான் உமாதேவியோடு கூடியிருக்கும் திருக்கோலமே உமேசமூர்த்தி யானது என்றும் சொல்லலாம். இத்தகைய சிறப்பு பெற்ற உமேசமூர்த்தியை தரிசிக்க நாம் செல்ல வேண்டியத் தலம் திருஇடைமருதூர் ஆகும். கும்பகோணம் அருகே அமைந்துள்ள இத்தலத்தில் கோயில் கொண்டுள்ள உமேசமூர்த்தியை காவிரி நீரால் அபிசேகம் செய்தால் குடும்ப வாழ்வு இன்பமயமானதாக அமைய அருள்புரிவார்.

இவரை திங்கள் அல்லது புதன் கிழமைகளில் செந்தாமரைப் பூவினால் அர்ச்சனையும், நெய்யன்னத்தால் நைவேத்தியமும் செய்ய கடனில்லை பெருவாழ்வு வாழலாம். இங்குள்ள சிவபெருமானுக்கு நன்னீர் அபிசேகம் செய்ய அகஉடல் தூய்மையடையும் என்பது திண்ணம்.



# 9. சோமாஸ்கந்த மூர்த்தி



சூரபத்மனின் கொடுமைகள் எல்லைக்கடந்து போயின. அவனது கொடுமைகளைத் தாள முடியாத விண்ணோர்கள் அனைவரும் ஈசனிடம் சென்று முறையிட்டனர். வல்லமைபெற்ற தங்கள் மகனால் அவனது வாழ்வு முடிய வேண்டுமென அவர்கள் விரும்பினர். சிவபெருமானும் அவர்களுக்காக மனமிரங்கி தம்முடைய ஆறு திருமுகத்திலுமுள்ள நெற்றிக் கண்ணிலிருந்து ஜோதிமயமான ஆறு நெருப்புப் பொறிகளை வெளிக்கொண்டு வந்தார். அப்பொறிகள் அகிலமெல்லாம் பரவின. உடன் பார்வதி தேவியார் அவ்வெப்பம் தாளாமல் தம் கொலுசு மணிகள் ஒன்றோடொன்று மோதி சிதறும் படி அந்தப்புரம் நடந்தார். இதனால் தேவர்கள் சித்தம் கலங்கி, மனம் வருந்தினர். மகனைக் கேட்டால் இவர் நெருப்பு பொறிகளை கொடுக்கின்றாரென கலங்கினர். உடன் வாயு தேவனையும், அக்னிதேவனையும் அழைத்து அப்பொறிகளைக் கொடுத்து கங்கையில் விடச் சொன்னார். கங்கையோ அப்பொறிகளை சரவணப்பொய்கையில் சேர்த்தது.

ஆறுமுகங்களும், பன்னிரு கரங்களுடனும் பிறந்த இக்குழந்தையை கார்த்திகைப் பெண்கள் பாலூட்டி வளர்த்தனர். பார்வதி தேவியின் கொலுசுமணியில் இருந்து



சிதறிய நவரத்தினங்கள் நவ வீரர்களாயின. இதற்கிடையே சரவணப்பொய்கையில் வளரும் தங்கள் குமாரனைக் காண சிவனும், பார்வதியும் இடப வாகனத்தில் முன் செல்ல தேவர்கள் பின் தொடர்ந்தன. அங்கு ஆறு குழந்தைகளை பார்வதி ஒன்றாக தூக்குகையில் அவை ஒரேக் குழந்தையாயிற்று. அந்த ஒரேக் குழந்தை ஆறு முகத்துடனும், பன்னிரு கரங்கள் கொண்டதாகவும் விளங்கியது. ஆறு முகங்களைக் கொண்டதால் ஆறுமுகன் என்றும், கந்தன் என்றும் அழைத்தனர். பின்னர் மூவரும் வெள்ளிமலையை அடைந்தனர். அங்கே சிவபெருமானுக்கும் பார்வதி தேவிக்கும் இடையே கந்தன் வீற்றிருந்தார். அந்த தோற்றத்தையே நாம் சோமாஸ் கந்த மூர்த்தி என்கிறோம். சோமாஸ் கந்த மூர்த்தியை தரிசிக்க திருவாரூர் செல்ல வேண்டும். அங்குள்ள ஆயிரம் கால் மண்டபம் அருகே சுரக்கும் அமுத தீர்த்தத்தினால் சோமாஸ் கந்தரை அபிசேகம் செய்ய உடல் வலிமை, அறிவு விரத்தி, தந்தைக்கே உபதேசிக்கும் அளவு புத்தி வலுவடையும். மேலும் திங்கள், வியாழக்கிழமைகளில் வில்வார்ச்சனையும், தயிரன்ன நைவேத்தியமும் கொடுக்க குரு ஸ்தானம் விரைவில் கைகூடும். எழுத்தாளர்களுக்கு திறமை வளரும். எனவே எழுத்தாளர்கள் தொழ வேண்டியவர் இவர்.



# 10. சந்திரசேகர மூர்த்தி




நான் முகனின் மகன் தட்சன். அவனுக்கு நட்சத்திரங்களே இருபத்தியேழுப் பெண்களாகப் பிறந்தது. அவர்கள் அனைவரையும் சந்திரனுக்கு திருமணம் செய்வித்தார். சந்திரன் திருமணம் நடைப்பெற்ற சிறிது காலம் வரை அனைத்து மனைவியரிடத்தும் அன்போடு இருந்தார். நாட்கள் செல்ல அவரது அன்பு கார்த்திகை, ரோகிணி இடத்தில் மட்டும் மிகுந்தது. இதனால் மற்றப் பெண்கள் மனம் சகியாது தந்தையாகிய தட்சனிடத்தில் கூறினர். தட்சனும் மருமகனை அழைத்து தம் அனைத்து மகள்களையும் சமமாக நடத்தும் படி, அவர்களுடன் அன்புடன் இருக்கும் படியும் புத்திமதிகள் கூறி அனுப்பி வைத்தார். சிறிது காலத்திற்குப் பின் சந்திரனின் நடவடிக்கையில் எந்த ஒரு மாற்றமும் ஏற்படாமல் இருந்தது.எனவே மறுபடியும் பெண்கள் தன் தந்தை தட்சனிடம் முறையிட்டனர். பெண்களின் துன்பம் சகியாது தட்சன் நாளுக்கொரு கலையாக குறைந்து இறப்பாய் என்று சந்திரனுக்கு சாபம் கொடுத்தார்.



சாபத்தின் வீரியத்தால் நாளொரு கலையாக சந்திரன் தேய்ந்து கொண்டே வந்து இறுதியாக ஒரு கலை மட்டுமே இருக்கும் நிலையில் இந்திரனின் ஆலோசனைப்படி நான்முகனை சந்தித்து தன் குறைகளைச் சொன்னான். நான் முகனோ தன் வேலையில் மகனும் மகன் வேலையில் தானும் தலையிடுவதில்லை என்று உறுதிகொண்டுள்ளோம். எனவே இக் குறைகளை சிவபெருமானால் மட்டுமே தீர்க்க முடியும் எனவே அவரை சரணடையிமாறு சொன்னார். அதன்படி சந்திரன் சிவபெருமானிடம் சரணடைய சிவனும் சந்திரனின் ஒரு கலையை எடுத்து தன் சடையில் வைத்து இனி உன் ஒருக்கலைக்கு அழிவில்லை ஆனாலும் தட்சனின் சாபத்தால் தினமொரு கலையாக அழிந்தும், என்னிடம் உள்ளதால் தினமொரு கலையாக வளர்ந்தும் காணப்படுவாய் என அருளாசி கூறினார். சந்திரனைத் தன் சடையில் தரித்ததால் சந்திரசேகரன் ஆனார். அவரது தலம் திருவாரூர் (புகலூர்) நாகபட்டிணம் அருகே உள்ளது. இங்கு கோயில் கொண்டுள்ள இறைவனின் திருநாமம் கோணபிரான் மற்றும் அக்னிபுரீஸ்வரர். இறைவி கருந்தாழ்குழலி யாகும். நல்லவனவற்றை மட்டுமேக் கொடுக்க கூடியவர் இங்குள்ள சந்திர சேகர மூர்த்தி. இவரை வழிபட பித்தளையும் வைரமாகும். மேலும் வெண்தாமரை அர்ச்சனையும், நெய்யன்ன நைவேத்தியமும் சோமவாரம், பௌர்ணமி தினங்களில் கொடுக்க அறிவு வளர்ச்சி மிகுவதோடு நினைவாற்றல் பெருகும். மேலும் இங்குள்ள சிவபெருமானுக்கு குளிர்ந்த சந்தனத்தால் அபிசேகம் செய்தால் நற்புகழ் அடையலாம்.



# 11. இடபாரூட மூர்த்தி



திரிபுர அசுரர்களின் தொல்லை நாளுக்கு நாள் பெருகிக்கொண்டேயிருந்தது. இனி பொருக்க முடியாத தேவர்கள் கைலாயம் சென்று நந்தி தேவரின் அனுமதியிடன் சிவபெருமானை தரிசித்தனர். சிவனும் போரிற்கு வேண்டிய ஆயுதங்களை தயார் நிலையில் வைக்கும் படி ஆணை இட்டார். ஆயுதங்கள் தயாரானதும் சிவபெருமானும், உமாதேவியும் தருமதேவதையாகிய வெண்ணிற இடப வாகனத்தில் கைலாய மலையை விட்டு இறங்கி வருகின்றனர். இதனைக் கண்ட அனைவரும் சிவதுதி சொல்லத் துவங்கினர். பின்னர் தேவர்களால் செய்யப்பட்ட தேரினைக்கண்ட சிவபெருமான் இடபவாகனத்தை விட்டு இறங்கி மேருமலையை வில்லாகக் கொண்டு தேர் ஏறியவுடன் தேரின் அச்சு முறிந்தது. இதனைக் கண்ணுற்ற விஷ்ணு சிவன் பால் கொண்ட அன்பினால் இடப உருவமாகி



சிவனைத் தாங்கினான். இதனால் விஷ்ணுவிற்கு தலைகனம் ஏற்பட்டது. தன்னைத் தவிர வேறொருவருக்கும் சிவனைத் தாங்கும் சக்தி இல்லை என்ற எண்ணம் வலுப்பெற்றது.

இதனை அறிந்த சிவபெருமான் விஷ்ணுவிற்கு பாடம் புகட்ட எண்ணி, தன்கனத்தை அதிகப்படுத்தினார். இதனைத் தாங்காத இடப வாகணமாகிய விஷ்ணு, இரு செவி, இரு கண்கள், மூக்கு போன்றவை பிதுங்கியும், இரத்தம் வடிந்தும் செயலிழந்து தரையில் வீழ்ந்தார். இதனால் தேவர்கள் பயத்துடன் சிவதுதிகளை சொல்லி அவரை சாந்தப்படுத்தினர். விஷ்ணுவும் மனம் வருந்தி மன்னிப்பு கேட்டார். விஷ்ணு தலைகனம் அழிந்தது. மனம் மகிழ்ந்த சிவபெருமான் பூமியில் இறங்கினார். பின்னர் விஷ்ணுவின் வலிமைகளை மறுபடியும் அழித்தார். விஷ்ணுவிடம் என்ன வரம் வேண்டுமென்றுக் கேட்க, விஷ்ணுவும் சிவபெருமான் வாமபாகத்திலிருந்து அவரைத் தாங்கும் சக்தியை தனக்கு கொடுக்க வேண்டும் என வேண்டினார். அதனை நிறைவேற்றிய சிவபெருமான் விஷ்ணுவின் விருப்பப்படி அரியாகிய இடத்தை வாகனமாகக் கொண்டு அதன்மேல் ஏறியமர்ந்தார். எனவே சிவபெருமானுக்கு இடபாரூட மூர்த்தி என்று திருநாமம் உண்டாகிற்று.

இடபாரூட மூர்த்தியை சரிசிக்க நாம் செல்ல வேண்டிய தலம் மயிலாடுதுறையருகேயுள்ள திருவாவடுதுறையாகும். இறைவனது திருநாமம் கோமூத்திஸ்வரர், மாசிலாமணிஸ்வரர் என்பதாகும். இங்குள்ள கோமூத்தி தீர்த்தத்தால் இடபாரூடரை அபிசேகம் செய்ய உடல் நோய் தீரும், குழந்தை பாக்கியம் உண்டாகும், திருமந்திர பொருள் விளங்கும். அருகம்புல் அர்ச்சனையும், தாம்பூல நைவேத்தியமும் பிரதோஷ காலங்களில் கொடுக்க நினைத்தது நடைபெறும். உயர்பதவி கிட்டும். இங்குள்ள சிவனை வில்வ நீரால் அபிசேகம் செய்ய அடுத்த பிறவியிலும் சிவனின் அருள் பரிபூரணமாய் கிடைக்கும் என்பது ஐதீகம்.



# 12.இடபாந்திக மூர்த்தி




சதுர்யுகங்கள் இரண்டாயிரம் நான்முகனுக்கு ஒரு நாளாகும். அது நூறு கொண்டது நான்முகனது ஆயுட்காலமாகும், நான்முகனின் ஆயுட்காலமே விஷ்ணுவிற்கு ஒரு நாள் ஆகும். ஆக விஷ்ணுவிற்கு நூறு வயது கழிந்தால் உலகிலுள்ள அனைத்து உயிர்களும் அழியும் என்பது கணக்கு, அழியும் ஊழிகாலத்தில் உமையுடன் சேர்ந்து திருநடனம் புரிவார் சிவபெருமான். இக்கணக்கினால் தர்மதேவதை வேதனை கொண்டது. தானும் அழிய வேண்டி வருமே என்ன செய்வது சிவபெருமானிடம் சரணடைவதுத் தவிர தனக்கு வேறு வழியில்லை என்று சிவனை சரணடைந்தது. இடபமாக மாறி தர்மதேவதை சிவனின் முன்பு நின்றது. ஐயனே நான் இறவாமலிருக்க வேண்டும். எப்பொழுதும் தங்கள் வாகனமாக நானிருக்கவும் ஆசி கூறுங்கள் என்றது.கேட்ட வரம் கொடுக்கும் அருட்கடலான சிவபெருமானும் இடபத்தில் தலை மேல் தனது கை வைத்து தர்மதேவதையே உன் விருப்பம் நிறைவேற்றப்படும்.



ஆகவே தருமத்தினை உலகிற்கு உணர்த்த கிருதயுகத்தில் நான்கு கால்களுடனும், திரேதாயுகத்தில் இரண்டு கால்களுடனும் கடைசியாக கலியுகத்தில் ஒரு காலுடனும் தோன்றி தர்மத்தினை நிலைநாட்டுவாய். மேலும் எப்பொழுதும் என்னை நீ பிரியாமல் இருப்பாய் எனது வாகனமாகும் பேற்றையும் நீயேப் பெறுவாய் என்று திருவாய் எழுந்தருளினார்.தனது அடியார்களுக்கு காட்சியளிக்கும் சிவபெருமானின் இடப வாத்திக தரிசன ரகசியம் இதுவேயாகும், இனி இடப வாத்திக மூர்த்தியை சரிசிக்க நாம் செல்ல வேண்டிய தலம் திருவாவடுதுறையாகும். இத்தலம் மயிலாடுதுறையருகே அமைந்துள்ளது. இங்குள்ள மாசிலாமணிஸ்வரர் கோயிலில் அமைந்துள்ள இடபாந்திக மூர்த்தியை வணங்குவோமானால் ஊழிக்காலத்தில் நம்முடைய ஆன்மா சிவபெருமானை தஞ்சமடையும் என்பது ஐதீகம். இவருக்கு திங்கள்,வியாழக்கிழமைகளில் வெண்தாமரை அர்ச்சனையும், பசுவின் பால் நைவேத்தியமும் கொடுக்க குரு தோஷ நிவர்த்தியுண்டாகும். மேலும் சிவபெருமானுக்கு வில்வ நீரால் அபிசேகம் செய்தால் மறுபிறவியிலும் சிவனருள் கிடைக்கும்.



# 13. புஜங்கலளித மூர்த்தி




காசிப முனிவரின் மனைவியரான கத்துருவிற்கும், வினந்தைக்கும் தங்களில் அடிகானவர் யார் என்றப் போட்டி ஏற்பட்டது. அப்படி அழகானவள் மற்றவளை சிறையில் அடைக்க வேண்டும் என்ற முடிவுடன் கணவரான காசிபரை நாடினார். கணவரோ கத்துருவே அழகி என்றுக்கூறினார், இதன் விளைவாக வினத்தை சிறையில் அடைக்கப்பட்டார். தன்னை விடுவிக்கும் படி கத்துருவை வேண்டினாள். கத்துருவோ தனக்கு அமிர்தம் கொடுத்தால் மட்டுமே விடுதலை கிடைக்கும் என்றார். உடன் வினந்தை தன் மகனான கருடனின் வனத்திற்கு இதைக் கொண்டு சென்றார். கருடனும் தேவலோகம் சென்று போரிட்டு அமிர்தத்துடன் செல்லும் போது திருமால் கருடனுடன் போரிட்டு வெல்ல முடியாமல் பறவை ராஜனே உன் பெருமைகளைப் போற்றினோம், உனக்கு வேண்டும் வரத்தைக் கேள் என்றார். கருடனே பதிலுக்கு திருமாலே உன் வலிமையை கண்டுகளித்தேன் நீ உனக்கு வேண்டிய இரண்டு வரங்களை கேள் என்றார். திருமாலும் இதுதான் சந்தர்ப்பமென தனக்கு வாகனமாக இருக்க வேண்டியும், அரவங்களுக்கு அமுதம்



கொடுக்காதிருக்கவும் வரம் வாங்கினார்.

கருடனும் அதற்கிசைந்து கொடுத்து விட்டு அமுதத்துடன் சிறைக்கு வந்து தாயிடம் கொடுத்தார். பின்னர் சிவபூஜை செய்து சிவபெருமானிடம் பலவரங்களைப் பெற்றுப் பின்னர் அன்று முதல் திருமாலின் வாகனமானார். மேலும் கருடன் திருமாலிடம் பெற்ற வரத்தினால் மற்றொரு தாயான கத்துருவின் கட்செவிகளைக் கொன்று கொடுமைப் படுத்தினார். இதனால் கோபம் கொண்ட நாகங்கள் சிவபூஜை செய்து தங்களுக்கு இறவாபுகழும், கருடனிடமிருந்து பாதுகாப்பும் வேண்டும் வேண்டினர். உடன் சிவபெருமானும் வேண்டிய வரத்தைக் கொடுத்து விட்டு நாகங்களை தன்னுடலில் ஆபரணமாக அணிந்து கொண்டார். இதனையே நாம் என்ன கருடா சௌக்கியமா என நாகங்கள் கூறுவதாக கொள்வோம். அதற்கு என்ன பொருளெனில் சிறியோரை கூடுதலைவிட பெரியோரைச் சேருதலே சிறந்தது என்பதாகும். பாம்புகளுக்கு அபயமளித்ததால் சிவபெருமானுக்கு புஜங்கலளித மூர்த்தி என்னும் பெயர் ஏற்பட்டது. ( புஜங்கம் - நாகம், லளிதம்- அழகு, ஆபரணம்) புஜங்கலளித மூர்த்தியை நாம் தரிசிக்க கல்லனை அருகேயுள்ள திருப்பெரும்புலியூர் செல்ல வேண்டும். சிவபெருமான் நாகங்களின் மீது நடனமாடிய திருக்கோயில் என்பதால் சிறப்பு பெற்றது. ராகுவின் அதிதேவதையான பாம்புவின் தலமென்பதால் இத்தல மூர்த்தியை வழிபட ராகு கிரகத் தொல்லைகள் விலகும், அவரது பார்வை நம்மீது பட்டு நற்பலன்களைக் கொடுக்கும். இவருக்கு நீலமலர் அர்ச்சனையும், பால், பழம், தேன் கொண்டு நைவேத்தியமும் சோமவாரங்களில் கொடுக்க சர்ப்ப கால தோஷம் விலகும். பாம்பு பயம் நிவாரணம் பெறும். இங்குள்ள இறைவன் பெயர் வியாக்கிரபுரிஸ்வரர் இறைவி பெயர் சௌந்திரநாயகி என்பதாகும். இவர்களுக்கு மஞ்சள் நீரால் அபிசேகம் செய்தாலும் சர்ப்பகால, ராகு தோஷம் விலகும் என்பது கண்கூடாகும்.



# 14. புஜங்கத்ராச மூர்த்தி



தாருவனத்தில் வசித்து வந்த முனிவர்கள் தவமே சிறந்தது என்றும், அவரது துணைவியர்களோ கற்பே சிறப்புடையது என்றும் வாழ்ந்து வந்தனர். இவர்களை சோதிக்க எண்ணினார் சிவபெருமான். பிட்சாடண கோலத்தில் சிவபெருமானும், மோகிணி கோலத்தில் திருமாலும் அவ்வனம் சென்று முனிவர்களின் தவத்தையும், துணைவியரின் கற்பையும் சோதித்தனர். இதனால் கோபம் கொண்ட முனிவர்கள் தவத்தை அழித்தது மோகிணி அவதார மெடுத்த திருமால் என்றும், கற்பை பரிசோதித்தது பிட்சாடண ரூபம் கொண்ட சிவபெருமான் என்றும் தங்களது தவ வலிமையால் அறிந்தனர். அதனால் கோபம் கொண்டு விஷ மரங்களை குச்சிகளாக்கி அதை நெய்யில் நனைத்து ஹோமமம் வளர்த்து வந்தனர். அதிலிருந்து வந்த பல கொடியப் பொருள்களை சிவனின் மீது ஏவினர். சிவனே அவற்றையெல்லாம் உடை, சிலம்பு, ஆயுதம், சிரோ மாலை, சேனை என்று உருமாற்றி தன்னிடம் வைத்துக்கொண்டார். தாங்கள் ஏவிய பொருள்கள் அனைத்தும் அவருக்கு ஆபரணமாகவும், படையாகவும் மாறியதை அறிந்த



முனிவர்கள் பெரும் கோபம் கொண்டனர். மேலும் அதிக விஷமுள்ள பாம்புகளை சிவனின் மீது ஏவினர். அந்த பாம்பு உலகை நாசமாக்கும் பொருட்டு தன்னுடைய நான்து பற்களில் கடும் விஷத்துடன் சிவபெருமானை அடைந்தது அவரும் அதற்கு சிறிது பயப்படும் படி நடித்து விட்டு தன்னுடலில் ஏற்கனவே ஆபரணமாக உள்ள பாம்புகளுடன் சேர்ந்து விடும்படி கூறி சேர்த்தார். அப்பாம்புகள் அவருடலில் கங்கணம்(கைவளை, காப்பு) காலணி அரைஞான் கயிறு ஆகியவையாக அணிந்து கொண்டு காட்சிக் கொடுத்தார். தாருவனத்து முனிவர் ஏவிய பாம்புகள் அவரை அச்சுருத்தியமையால் அவரை புஜங்கத்ராச மூர்த்தி என்றனர். (புஜங்கள் - பாம்பு, திராசம் - பயப்படுதல்)

புஜங்கத்ராச மூர்த்தி யை தரிசிக்க நாம் செல்ல வேண்டி தலம் பெரும்புலியூர் ஆகும். இந்த சிவபெருமான் கோயிலில் தான் சிவன் தன்னுடைய ஆடையாக பாம்புகளை அணிந்த படி காட்சிக் கொடுக்கின்றார். இந்த வடிவத்தையே நாம் புஜங்கத்ராச மூர்த்தி என்கின்றோம். இவரை வணங்கினால் ராகு தோஷம் நிவர்த்தியடையும். இவருக்கு சோமவாரம் அல்லது குருவாரத்தில் வில்வார்ச்சனையும், சம்பா அன்ன நைவேத்தியமும் கொடுக்க கடன் தொல்லை தீரும். இங்குள்ள சிவபெருமானை மஞ்சள் நீரால் அபிசேகம் செய்ய ராகு கால தோஷம், சர்ப்ப கால தோஷம் விலகும்.



# 15. சந்த்யாந்ருத்த மூர்த்தி




தேவர்கள் சிவபெருமானின் உதவியில்லாமல் பாற்கடலைக் கடைந்தனர். அதில் மந்திரமலையை மத்தாகவும், வாசுகியை கயிறாகவும் கொண்டு கடைந்தனர். இதில் வாசுகியின் வாயையும் வாலையும் தேவர்களும், அசுரர்களும் இழுக்கும் பொருட்டு வாசுகி கொடிய ஆலகால விஷத்தைத் துப்பியது அவ்விஷம் அனைவரையும் எதிர்த்தது, எதிர்ப்பட்ட திருமாலும் அதன் முன் உடல் கருகினார். இதனைக் கண்ட தேவர்கள் கைலாயம் சென்று சிவபெருமானிடம் முறையிட்டனர்.

சிவபெருமானும் தேவர்களின் துயரைப் போக்க அவ்விஷத்தை உண்டார். அதனால் அவர்க்கு ஒன்றும் நேரவில்லை எனினும் ஒரு விளையாட்டை நிகழ்த்தினார். அவ்விஷம் அவரைத் தாக்கியது போல், மயங்குவது போல் உமா தேவியின் முன்பு மௌனமாய் உறங்குவது போல் இருந்தார். இதனைக் கண்ட தேவர்கள் அவரை அர்ச்சித்து அன்று முழுவதும் உறக்கம், உணவின்றி இருந்தனர். அந்தத் திதியை

நாம் ஏகாதசி என்போம். மறுநாளாகிய துவாதசியில் தேவர்கள் பாராயணஞ் செய்தனர். அதற்கு மேற்ப்பட்ட திதியான திரயோதசியில் சிவயபெருமான் சூலம், உடுக்கை சகிதம் ஒரு சாமகாலம் திருநடனம் செய்தார். அந்த காலத்தை நாம் பிரதோஷம் என்போம். அதாவது பதினைந்து தினங்களுக்கொருமுறை வரும் திரயோதசியை நாம் மாத பிரதோஷம் என்றும், வருடத்திற்கொருமுறை வரும் மகா சிவராத்திரியை வருடப் பிரதோஷம் என்றும், தினசரி மாலை முடிந்து இரவு ஆரம்பிக்கும் நேரத்தையும் நாம் பிரதோஷ காலமாகக கொள்ளலாம்.

சிவபெருமான் நிருத்தம்(நிருத்தம் - நடனம்) செய்வதைக் கண்ட தேவர்கள் மனம் மகிழ்ந்தனர். தனது கரங்களை சிரத்திற்கு மேல் தூக்கி சிவசிவ என்று ஆர்ப்பரித்தனர். ஆடினர், பாடினர், தேவர்கள் அவர் நடனத்திற்கு ஏற்றவாறு வாத்தியங்களும், விஷ்ணு மிருதங்கமும் வாசித்தனர். பிரதோஷ காலத்தில் சிவபெருமான் நடனம் ஆடியதால் அவரது பெயர் சந்த்யாந்ருத்த மூர்த்தி என்றானது. அவரை தரிசிக்க மதுரை செல்ல வேண்டும். சதாசிவமூர்த்தியின் உச்சியில் அமைந்துள்ள ஈசான முகத்திலிருந்து தோன்றிய வடிவமே நடராஜமூர்த்தி யாவார். அவரது வடிவமே சந்த்யாந்ருத்த மூர்த்தி போன்ற பல வடிவமாகப் பறந்து விரிந்தது. மதுரை வெள்ளியம்பலத்தில் உள்ள இவரை வணங்குவோமானால் நம் தொழில்களை காப்பதுடன் பலகலைகளில் சிறப்பு பெற உதவுவார். செந்தாமரையால் அர்ச்சனையும், தேங்காய் சாத நைவேத்தியமும் திங்கள், புதன் கிழமை மாலையில் செய்ய தடங்கள் அகழும், விரோதிகள் ஒழிவர். நன்மை பாராட்டுவர். மதுரை நடராஜ பெருமானுக்கு பன்னீரால் அபிசேகம் செய்தால் கல்வியறிவு மேன்மையடையும் என்பது ஐதீகம்.



# 16. சதா நிருத்த மூர்த்தி



சிவபெருமான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் பஞ்சாட்சரத்தையே தன் மேனியாகக் கொண்டு இருப்பவர். அவரது மூன்று கரங்களும், இருபாதங்களும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து செயல்களை செய்கிறது. அது எப்படியெனில் டமருகம் தாங்கிய கரத்தினால் படைத்தலும், அமைந்த கரத்தினால் காத்தலும், மழு தாங்கிய கரத்தினால் அழித்தலும், முயலகன் முதுகில் ஊன்றிய திருப்பாதங்களால் மறைத்தலும், அனவரத நடனம் புரியும் அடிப் பாதத்தினால் அருளலும் புரிகின்றார்.

மேலும் உலக உயிர்கள் அனைத்தும் எங்கும் நிறைந்துள்ள இறைவனுடன் ஐக்கியமாவதைக் குறிக்கிறது. இந்த நடனத்தை இடது புறமாக நின்று தரிசிக்கும் உமாதேவியாரின் தோற்றம். சிவபெருமான் திருத்தக் கோலம் கொண்டு நடனம் புரியும் திருவடியில் நகரமும், திருவயிற்றின் மீது ம கரமும், திருத்தோளின் மீது



சி கரமும், திருமுகத்தில் வா கரமும், திருமுடியின் மீது ய கரமும் கொண்டு கருணையால் இயற்றினார். சிவபெருமான் பல காரணங்களால் பல முறை நடனம் புரிந்துள்ளார். இருப்பினும் உமாதேவியார் தரிசிக்கும் நிலையில் தேவர்கள், சிவகணங்கள் நத்திதேவர் போன்றவர்களோடும், இசைவாத்தியங்களோடும், பஞ்சாட்சரமேனியோடு எப்பொழுதும் திருநடனம் புரிந்து கொண்டே இருப்பதால் இவரது பெயர் சதா நிருத்த மூர்த்தி யாகும்.

சிதம்பரத்திலுள்ள பொன்னம்பலத்தில் சிவபெருமான் எப்பொழுதும் ஆனந்த தாண்டவம் ஆடிக்கொண்டேயுள்ளார். எங்கெங்கெலாம் நடராஜர் இருப்பினும் அவர்களனைவரும் இரவில் இங்கு வருவதாக ஐதீகம். எனவே இத்தலத்தில் நடராஜ பெருமானுக்கு செய்ய வேண்டிய பரிகாரங்களை செய்யலாம். இறைவனைக் கூத்தபிரான் என்றும், இறைவியை சிவகாம சுந்தரி என்றும் அழைப்பர். கவியாற்றுவதற்கும், வாதப் போர்புரிவதற்கும், தடைபெற்ற தேர் திருவிழா மறுபடியும் நடைபெறவும், இவரை வணங்கினால் தடை நீங்கி நடைபெறும் என்பது கண் கூடு. இவருக்கு முல்லைப்பூ அர்ச்சனையும், வெண்பொங்கல் நைவேத்தியமும் திங்கள், வியாழக் கிழமைகளில் செய்ய விரோதியும் நண்பனாவான். மேலும் இங்குள்ள கூத்தப்பிரானுக்கு அன்ன அபிசேகம் செய்ய கைவிட் அரசுரிமையும் கிடைக்கும்.



# 17. சண்ட தாண்டவ மூர்த்தி




திருவாலங்காட்டில் மகிமையை உணர்ந்த சுனந்த முனிவர் அங்கு தாண்டவ நடத்தைக் காட்ட வேண்டிய தவமியற்றினார். அப்போது சிவபெருமானின் கைவிரலில் உள்ள பாம்பு அவரது திருவிரலில் விஷம் கக்கியது. இதனைக் கண்ட இடபம் நீ செய்த தீமைக்காக திருக்கைலையை விட்டு நீங்குமாறு கார்கோடகனிடம் கூறியது. கார்கோடகனும் பயந்து சிவனிடம் முறையிட்டது. உடன் சிவபெருமான் திருவாலங்காட்டில் தவமியற்றும் சுனந்தருடன் சேர்ந்து சண்டதாண்டவத்தை தரிசித்த உடன் கைலை வருவாயாக என்றார். திருவாலங்காடு சென்ற கார்கோடகன் சுனந்தருடன் சேர்ந்து தவமியற்றியது. அப்போது சும்பன், நிசும்பன் எனும் இரு அசுரர்கள் அனைவரையும் கொடுமைபடுத்தி வந்தார்கள். இதனைக் கண்ட தேவர்கள் பார்வதி தேவியிடம் முறையிட்டனர். பார்வதியும் சப்தமாதர்கள், சிவகணங்களுடன் சாமுண்டி என்ற சக்தியாக மாறி அவர்கள் இருவரையும் கொன்றனர். அவர்களிருவரின்



சகோதரியான குரோதி என்பவளின் மகன் இரத்த பீசன்.

அவனது ஒவ்வொரு சொட்டு இரத்தமும் நிலத்தில் விழுந்தால் அதுவொரு இரத்தபீசனாக மாறிவிடும். இத்தகைய வரம் பெற்ற அவனை அழிக்க வேண்டி பார்வதி காளி தேவியை தோற்றுவித்தாள். காளி அவனது ஒரு சொட்டு இரத்தம் கூட நிலத்தில் சிந்த விடாமல் பருகினாள். போர் நல்லபடியாக முடிந்தது. பார்வதி சண்டியாகிய காளி தேவி சிவபெருமானிடம் நடனம் செய்து அவருடன் வசிக்கும் வரத்தையும் வழங்கிவிட்டு சென்றார். அசுரனின் மாமிசத்தையும், இரத்தத்தையும் குடித்ததால் காளிதேவி யாருக்கும் அடங்காமல் வனங்களில் அரசாட்சி புரிந்து வந்தார். அவ்வாறே திருவாலங்காடு வந்து சேர்ந்தார். அங்கு வந்த காளி அட்டகாசத்தை ஆரம்பித்தார். இச் செய்தி முனிவர் மூலம் நாரதரிடம் தெரிவிக்கப் பட்டது. நாரதர் மூலம் சிவபெருமானிடம் தெரிவிக்கப்பட்டது. சிவபெருமான் உடன் பைரவராக மாறி போர் புரிந்தார். காளி தேவி தோற்றுவிட்டார். தோற்றக் காளி நடனப் போர்புரிய பைரவரை அழைத்தார். பைரவரும் சம்மதித்து தேவர்களின் வாத்திய இசைக்கு ஏற்ப நடனம் ஆடினார். நவரசங்கள் ததும்ப இருவரும் சலைக்காமல் ஆடினர். இந்த சண்ட தாண்டவம் நடை பெறும் போது சிவனின் குண்டலம் கீழே விழ, அதைத்தன் காலால் எடுத்துக் காதில் பொருத்தினார் போட்டியாக ஆடிய காளி வெட்கத்துடன் தன் தோல்வியை ஒப்புக்கொண்டார்.

காளியின் செருக்கும் அழிந்தது. சுனந்தர், கார்கோடகன், உற்பட அனைத்து தேவர், முனிவர்களும் எல்லாக் காலமும் காணும்படி தாண்டவக் கோலத்தை அருளினார். இக்காரணத்தால் அவரை சண்ட தாண்டவ மூர்த்தி என்கிறோம். கும்பகோணம் பேருந்து நிலையம் அருகேயுள்ளது கீழ்க் கோட்டம். இறைவன் பெயர் நாகநாதர், இறைவி பெயர் பெரியநாயகி ஆவார். இங்குள்ள நடராஜ மண்டபத்தை நாம் பேரம்பலம் என்போம். இங்கமைந்த மூர்த்தியை வணங்கி சிவ தியானம் செய்தால் தாண்டவ ஒலியைக் கேட்கலாம். முல்லைப்பூ அர்ச்சனையும், வெண்சாத நைவேத்தியமும் சோமவாரங்களில் கொடுத்தோமானால் நடனம், பாட்டு, நட்டுவாங்கம், என அனைத்தும் கைவரும். மேலும் இங்குள்ள மூலவரை கும்பநீரால் அபிசேகம் செய்து வழிபட்டால் பிறவிப் பயன் பெறமுடியும்.



# 18. கங்காதர மூர்த்தி




திருக்கைலையிலுள்ள ஒரு தோட்டத்தில் சிவபெருமான் நடைபயின்றுக் கொண்டிருந்தார். பார்வதி தேவி ஓசைப்படாமல் சென்று அவரது இரு கண்களையும் விளையாட்டாய் பற்றினார். உடன் உலக உயிர்கள் அனைத்திற்கும் அளவிலாத துன்பம் ஏற்பட்டது. அதனால் உலகம் முழுவதும் பேரிருள் சூழ்ந்தது. இதனையறிந்த சிவபெருமான் தனது நெற்றிக்கண்ணைத் திறந்து அனைவரையும் காத்தார். ஒளி வந்ததால் அனைத்து உயிர்களும் துன்பம் நீங்கி இன்பமடைந்தனர். அனைவரும் சிவபெருமானைப் போற்றினர். இதனைக் கேள்விப் பட்ட பார்வதி தேவி அவசரமாக தன் கைகளை நொடிப்பொழுதில் எடுத்தார். இதனால் இவரது பத்து கைவிரலில் இருந்த வியர்வைத் துளிகள் பத்தும் கங்கையாக மாறி மூவுலம் முழுவதும் பரவி பெருத்த சேதத்தையும், அழிவையும் உண்டாக்கியது. இதனைக் கண்ட முவுலகத்தினரும் சிவபெருமானிடம் முறையிட்டனர்.



சிவபெருமானும் அவ்வெள்ளத்தை அடக்கி அதனை தனது சிரசில் ஓர் மயிர் முனையில் தரித்தார். இதனைக்கண்ட அனைவரும் சிவபெருமானைப் போற்றித் துதித்தனர். நான்முகன், இந்திரன், திருமால் ஆகிய மூவரும் சிவபெருமானிடம் சென்று நாதா பார்வதி தேவியின் கைவிரல் வியர்வையால் உண்டான கங்கை பெரும் புனிதமானது, அதை உங்கள் முடியில் தரித்ததால் அது மேலும் புனிதமடைகிறது. அத்தகைய புனிதப் பொருளை எங்களுக்கும் கொஞ்சம் கொடுத்தருள வேண்டும் என்றனர். அதன்படியே இந்திரன் தனது அமராவதி நகருக்கும், நான்முகன் தனது மனோவதி நகருக்கும், திருமால் தனது வைகுண்டத்திற்கும் கங்கையைக் கொண்டு சேர்த்தனர்.

கங்கையின் வெள்ளத்தையும், வேகத்தையும் குறைத்து தனது சடைமுடியில் தாங்கியிருப்பதால் சிவபெருமானுக்கு கங்காதர மூர்த்தி என்ற பெயர் ஏற்பட்டது. கங்காதர மூர்த்தியை தரிசிக்க இமயத்திற்கு தான் செல்ல வேண்டும். இமயமலையே கங்காதர மூர்த்தியின் இருப்பிடமாகும். அங்கு சென்று கங்காதர மூர்த்தியை மானசீகமாய் வணங்கி அங்கு கிடைக்கும் கங்கை நீரை வீட்டிற்கு எடுத்து வந்து தெளிக்க இடம் புனிதமாகும். கங்காதர மூர்த்தியை மல்லிப்பூ அர்ச்சனையும், பாலில் செய்த இனிப்பு பண்ட நைவேத்தியமும் சோமவாரத்தில் சந்தியா காலத்தில் செய்தோமானால் செல்வசெழிப்பும் இனியோரு பிறவி இல்லா நிலையும் ஏற்படும். இந்த கங்கை நீரை வீட்டில் கலசத்தில் வைத்து வழிபட லஷ்மி கடாட்சம் கிடைக்கும்.



# <u>19. கங்கா விசர்ஜன மூர்த்தி</u>




சகரன் எனும் அரசன் அயோத்தி நகரை ஆண்டுவந்தான். அவன் அஸ்வமேத யாகம் செய்ய ஒரு குதிரையைக் கொணர்ந்தான். அக்குதிரை இருந்தால் தானே யாகம் நடைபெறும் அதைத் தடுக்க வேண்டி குதிரையை பாதாளத்தில் கபில முனிவர் அருகே கட்டி வைத்தான். அயோத்தி மன்னன் குதிரையைத்தேடி கொண்டுவரும் படி தமது அறுபதினாயிரம் மக்களையும் பணிந்தார். பாதாளத்தில் முனிவர் அருகே குதிரைக் கண்ட அவர்கள் முனிவரே கள்வன் என முடிவு கட்டினர். உடன் முனிவர் கண்விழிக்க, அனைவரும் சாம்பலானாகள். இச் செய்தி கேள்விப்பட்ட மன்னன் தன் மகன் அஞ்சுமானை அனுப்பினார். அஞ்சுமானும் கபிலரிடம் சென்று உண்மையைக் கூறி குதிரையை மீட்டு தன் தந்தையின் யாகம் நிøவேற உதவினான். அவனது வம்சாவளியிலே வந்தவனே பகிரதன் ஆவான். அவன் தனது முன்னோர்க்கு ஏற்பட்ட நிலையை எண்ணி நான்முகனை நோக்கி



தவமிருந்தான். நான்முகன் தோன்றி கங்கையால் உன் முன்னோர்கள் மோட்சமடைவர் எவனே சிவனை நோக்கி தவமிக்க சொல்லி மறைந்தார். சிவனை நோக்கி தவமிருந்தான் பகிரதன்.

சிவபெருமான் கேட்ட வரம் கொடுத்தார். பின் கங்கையை நோக்கி தவமிருந்தான். கங்கையோ தன்னை அடக்க சிவபெருமானால் மட்டுமே முடியும் எனவே மறுபடியும் சிவனை நோக்கி தவமியற்றும் படி கூறினார். மறுபடியும் சிவன் கேட்ட வரம் கொடுத்தார், உடன் கங்கை வந்தார். சிவபெருமான் அவரை அடக்கும் பொருட்டு தனது தலை முடியில் அணிந்தார். இதனையறியா பகிரதன் பதறினார். பின் சிவபெருமான் தன் தலை முடியில் இருந்த கங்கையில் இருந்து சிலதுளிகள் பகிரதன் கைகளில் விட்டார். அந்த சில துளிகளும் வேகத்துடன் வந்து ஐந்து முனிவர்கள் இயற்றிய யாகத்தை அழித்தது, அதனால் அம்முனிவர்கள் கங்கையை தம் உள்ளங்கையில் வாங்கி உட்கொண்டனர். பகிரதன் கங்கையைக் காணாது திகைத்தான். பின் முனிவர்களை வணங்கி நடந்ததைச் சொல்லி கங்கையைத் திருப்பிதர வேண்டினான். அம்முனிவர்களும் இசைந்து தம் செவி வழியாக விட்டனர். அதனால் கங்கைக்கு ஜானவி என்ற பெயர் ஏற்பட்டது. பகிரதன் கங்கையை தம் முன்னோர்களின் சாம்பல் மீது தெளிக்க அவர்கள் சொர்க்கம் அடைந்தனர்.

பகிரதன் கொண்டு வந்ததால் கங்கைக்கு பகீரதி என்ற பெயர் ஏற்பட்டது. கங்கையை தனது சடையில் ஏற்று வழிபாட்டிற்கே சிறு துளி கொடுத்து வழி காட்டியதால் சிவபெருமானுக்கு கங்கா விசர்ஜன மூர்த்தி என்ற பெயர் ஏற்பட்டது. அவரை தரிசிக்க கேதார் நாத் செல்ல வேண்டும். ஆறு மாத காலம் கோயிலில் வழிபாடுகள் நடைபெறும். பனிமழையால் ஆறுமாதம் மூடப்பட்டிருக்கும். உமை சிவனிடம் இடபாகம் பெற்ற தலமே கோதார்நாத் ஆகும். இங்கு கோயில் கொண்டுள்ள கோதாரேஸ்வரரை வணங்கி அங்குள்ள புனித நீரை வீட்டில் நடைபெறும் சுபகாரியங்களுக்கு பயன்படுத்தினால் சுபமாகும். வெண்தாமரை அர்ச்சனையும், எள்ளோதரை நைவேத்தியமும் அமாவாசை, திங்கள் கிழமைகளில் செய்தோமானால் பிதுர் தோஷம் சரியாகும். அவர்கள் சொர்க்கம் செல்வர். மேலும் இங்கிருந்து கொண்டு செல்லும் நீரை வெள்ளிக்கலசத்தில் வைத்து பூஜிக்க குபேர சம்பத்து கிட்டும் என்பது ஐதீகம்.



# 20. திரிபுராந்தக மூர்த்தி



தாரகாசுரனின் மூன்று மகன்களும் நான்முகனை நோக்கி நெடுங்காலம் தவமியற்றி வந்தனர். நான்முகனும் காட்சிக் கொடுத்தார் உடன் அவர்கள் என்றும் அழியாத வரம் வேண்டும் என்றனர். உடன் நான்முகனோ அது முடியாத காரியம் அனைவரும் அனைவரும் ஒரு நாள் அழிந்தே தீருவோம். எனவே மோட்சமாவது கேளுங்கள் கிடைக்கும். இவ்வுலகில் என்றும் அழியாமல் இருப்பவர் சிவபெருமான் மட்டுமே என்றார். உடனே அம்மூவரும் அப்படியானால் பொன், வெள்ளி, இரும்பினால் ஆன சுவருடைய முப்புரம் வேண்டும். அவை நாங்கள் நினைத்த இடத்திற்கு மாற வேண்டும். அவற்றை எங்களையும் சிவபெருமான் தவிர வேறொருவர் அழிக்க முடியாத வரத்தை கேட்டனர். நான்முகனும் கொடுத்து விட்டு மறைந்தார். அம்மூவரும் தங்கள் சுயரூபத்தை சிவனிடம் காட்டாமல் மற்ற அனைவரிடத்திலும் காட்டினர். தேவர்கள் அவர்களது தொல்லை தாளாமல் திருமாலிடமும், இந்திரனிடமும் முறையிட, அவர்கள் அசுரர்களிடம்

தோற்று திரும்பினர். பின்னர் சிவனை நோக்கி தவமிருந்தனர். சிவபெருமான் அவர்கள் தமது அடியார் எனவேக் கொல்ல முடியாது என்றார். மீண்டும் கடுமையான தவத்தை திருமால், இந்திரன், நரதர் மேற்க்கொண்டனர். உடன் சிவபெருமான் அப்படியானால் தேர் முதலான பேர் கருவிகளைத் தயார் செய்யும் படி தேவர்களிடம் கூறினார்.

தேவர்களும் அவ்வாறே தயார் செய்தனர். தேரில் மந்திர மலையை அச்சாகவும், சந்திர, சூரியர் சக்கரமாகவும், நதிகள் தேர்க் கொடியாகவும், அஷ்டபர்வதங்கள் தேரின் தூண்களாகவும், புண்ணிய நதிகள் சாமரம் வீசவும், தேவகணத்தினர் வாத்தியங்கள் இசைத்தப்படி உடன் வர தேர் தயாரானது. சிவபெருமான் பார்வதியுடன் இடபவாகணத்தில் இருந்து தேரில் கால் எடுத்து வைத்தவுடன் தேரின் அச்சு முறிந்தது. உடன் இடபமாக மாறி திருமால் தேரைத் தாங்கினார். ஆனாலும் தேர் மேலும் சாய அனைவரும் முதற்கடவுளை வேண்ட, தேர் பழைய படி சரியானது. பின் தேவகணங்கள் படைசூழ, இந்திரன், திருமால், முருகன், வினாயகன் என அனைவரும் தங்களது வாகனம் ஏறி முடிவில் அனைவரின் எண்ணப்படி மேருமலையை வில்லாகக் கொண்டு, வாசுகியை அம்பாகக் கொண்டு நாணேற்றினார். பின் திடிரென அவற்றை வைத்து விட்டு முப்புறங்களையும் பார்த்து ஒரு புன்னகைப் புரிந்தார். முப்புறங்களும் எரிந்து சாம்பலாயின.

உடன் அசுரர்கள் மூவரும் ( தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி) சிவபெருமானிடம் மன்னிப்புப் கேட்க. அவரும் அவர்களை மன்னித்து துவார பாலகராக வைத்துக் கொண்டார். தேவர்களின் துயர்துடைத்து முப்புரங்களையும் எரித்ததால் சிவபெருமானுக்கு திரிபு ராந்தக மூர்த்தி என்னும் பெயர் ஏற்பட்டது. இவரை தரிசிக்க நாம் செல்ல வேணடிய தலம் கடலூரில் உள்ள திருஅதிகையாகும். இங்குள்ள இறைவன் பெயர் திரிபுராந்தக மூர்த்தி, அதிகைநாதர் என்பதும், இறைவி பெயர் திரிபுரசுந்தரியாகும். இவர்க்கு கெடில நதியால் அபிசேகமும் வில்வார்ச்சனையும் செய்ய பகைவர் பகை ஒழிந்து நண்பராவார்கள். சூலை நோய் இருப்பின் இந்த சுவாமியை வழிபட நோய் குறைந்து உடல் நலம் சீராகும். மேலும் இங்குள்ள சிவபெருமானுக்கு திருமஞ்சனத்தூள் அபிசேகம் செய்ய எவ்வகை நோயும் குணமடையும் என்பது ஐதீகம்.



# 21. கல்யாண சுந்தர மூர்த்தி



திருக்கைலையில் அனைத்து தேவர்குழாமுடன் சிவபெருமான் வீற்றிருக்கையில் பார்வதி தேவியார் எழுந்து இறைமுன் சென்று தக்கன் மகளால் தாட்சாயிணி என்ற பெயர் பெற்றேன். அந்த அவப்பெயரை மாற்ற தங்கள் தயவு வேண்டும் என்றார். உடன் சிவபெருமானும் பார்வதி பர்வத மன்னன் உன்னை மகளாக அடைய தவம் இயற்றுகிறான். நீ அவரிடம் குழந்தையாக பிறப்பாயாக. பிறகு உன்னை நான் மணமுடிப்பேன் என்றார். அதன்படி பர்வத மன்னரிடம் மூன்று வயதுள்ள குழந்தையாக வந்து சேர்ந்தார். அக்குழந்தையை அவர்கள் சீராட்டி வளர்த்தனர். பார்வதிதேவி அருகில் இல்லாததால் சிவபெருமான் யோகத்தில் இருந்தார். அதனால் உலக இயக்கம் ஸ்தம்பித்தது. உடன் தேவர்களின் ஆலோசனைப்படி மன்மதன் சிவபெருமானின் யோகத்தைக் கலைக்க பாணம் விட்டார். இதனால் கோபமுற்ற சிவபெருமான் அவரை நெற்றிக் கண்ணால் எரித்தார். இதனால் கவலையுற்ற ரதி சிவனிடம் சரணடைந்தார். அவரும்



பொருத்திருக்கச் சொன்னார்.

இதற்கிடையே பர்வத ராஜனிடம் வளரும் பார்வதிதேவி சிவனை மணாளனாக அடைய வேண்டித் தவமிருந்தார். பார்வதி முன் அந்தணராகத் தோன்றி தன்னை மணம் புரியும் படி வேண்டினார். பார்வதி அதை மறுத்து சிவபெருமானை மணம் செய்யவே தான் தவமிருப்பதாகக் கூறினார். உடன் அந்தண வேடம் கலைந்து இடபத்துடன் சிவபெருமான் காட்சிக்கொடுத்தார். விரைவில் வந்து மணம் புரிவேன் என்று கூறி மறைந்தார். பார்வதி தேவி தன் தந்தையிடம் நடந்தவற்றைக் கூறினார். அங்கே சிவபெருமான் சப்தரிஷிகளிடம் தனக்கு மலையரசன் மகளை மணம் பேசச் சொன்னார். இருவீட்டாரும் பேசி திருமணத்திற்கு நாள் குறித்தனர். பங்குனி உத்திர தினம் மணநாளாக குறிக்கப்பட்டது. தேவருலகத்தினர் படைசூழ சிவபெருமான் பர்வதம் விரைந்தார். அனைவரும் அங்கே குவிந்ததால் வடதிசை தாழ்ந்தது. உடன் சிவபெருமான் அகத்திய முனிவரை தென்திசை சென்று நிற்கும் படி வேண்டினார். அவர் தயங்கவும் உமக்கு எம் திருமணக்கோலத்தை காட்டுவோம் எனவே தென்திசை செல்க என்று பணிந்தார். அகத்தியரும் அவ்வாறு சென்றார். உடன் இருவருக்கும் திருமணம் நடைபெற்றது. அப்பொழுது ரதி தனது கணவனை உயிர்ப்பிக்க வேண்டினார்.

சிவபெருமானும் அவ்வாறே மன்மதனை உயிர்ப்பித்தார். பின் ரதியின் கண்களுக்கு மட்டும் உருவத்துடனும், மற்றொர்க்கு அருபமாகவும் காட்சியளிக்கும் படி வேண்டினார். பின் அவரவர், அவரவர் இருப்பிடம் திரும்பினர். பார்வதி தேவியை திருமணம் செய்ய சிவபெருமான் எடுத்த கோலமே கல்யாண சுந்தர மூர்த்தியாகும். அவரை தரிசிக்க தாம் செல்ல வேண்டிய தலம் திருவாரூர் அருகேயுள்ள திருவீழிமலையாகும். இங்கு மூலவர் பெயர் விழியழகர், இறைவி பெயர் சுந்தர குஜாம்பிகை யாகும். இங்கு உற்சவ மூர்த்தியாக கல்யாண சுந்தரர் காட்சியளிக்கிறார். இங்குள்ள கல்யாண சுந்தரருக்கு அர்ச்சனை செய்த மாங்கல்யத்தை தானமாகப் பெற, கொடுக்க திருமணம் தங்குதடையின்றி நடைபெறும். மேலும் பிரதோஷ தரிசனமும் சிறப்பானதாகும். மல்லிகைப்பூ அர்ச்சனையும், சர்க்ககரைப் பொங்கல் நைவேத்தியமும் திங்கள், குருவாரங்களில் கொடுக்க திருமணத்தடை விலகும். கணவன் மனைவி ஒற்றுமை ஓங்கும். மேலுமொரு சிறப்பாக கல்யாண சுந்தரருக்கு ரோஜாமாலை அணிவித்துப் பூச்செண்டு கொடுத்தால் கல்யாணம் இளம்பெண்களுக்கு கூடி வரும். இங்குள்ள மூலவரின் பின் புறம் சிவபெருமான் உமை திருமணக்கோலம் உள்ளது.



# 22. அர்த்த நாரீஸ்வர மூர்த்தி




திருக்கைலையில் சிவபெருமானை தரிசிக்க திருமால், நான்முகன், இந்திரன் என அனைத்தும் தேவருலகத்தினரும் திரண்டிருந்தனர். அவர்களை வரிசைப்படி நந்தி தேவர் அனுப்பிக் கொண்டிருந்தார். அனைவரும் பார்வதி தேவியையும், சிவபெருமானையும் தனித்தனியாக வணங்கி வேண்டும் வரங்களைப் பெற்றுச் சென்றனர். பின்னர் வந்த முனிகுமாரர்களில் ஒருவரான பிருங்கி முனிவர் பார்வதி தேவியை சட்டைச் செய்யாமல் சிவபெருமானை மட்டுமே வணங்கிய படிச் சென்றார். இதனைக் கண்ணுற்ற பார்வதிதேவி அவரது உடலிலுள்ள சதையை தனது மூச்சுக் காற்றால் இழுத்துக் கொண்டார். இதனையும் சட்டை செய்யாத பிருங்கி முனிவர் எழும்பும் தோலுமாகவே சிவபெருமானை துதித்தார். சிவபெருமான் தன்னை மட்டும் வணங்கியதால் பார்வதிதேவியின் திருவிளையாடல் என்பதை புரிந்து மேலும் ஒரு காலை முனிவருக்கு



வழங்கினார். முனிவர் அகன்றவுடன் பார்வதி தேவி தான் தவமியற்றப் போவதாகக் கூறி கைலாயத்தை விட்டு நீங்கி வினாயகன், முருகன், சப்த மாதர்கள் படைசூழ ஒரு மலைச்சாரலில் உறுதியான தூண் மீது நின்றவாறு தவம் இயற்றினார். கடுமையான உறுதியான தவத்தால் மகிழ்ந்த சிவபெருமான் தனது படைபரிவாரங்களுடன் தேவி தவமியற்றும் இடத்திற்கு வந்தார். உடன் அவர் தேவி உனக்கு என்ன வேண்டும் கேள் என்றார். உடன் தேவி இறைவா நான் தனியாகவும் நீங்கள் தனியாகவும் இருப்பதால் தானே இந்தப் பிரச்சனை. எனவே தங்களது இடபாகமாக நானிருக்கும்படியான வரத்தைத் தாருங்கள் என்றார்.

சிவபெருமானும் அவ்வாறே தந்து தனது இடப்பாகத்தில் தேவியை ஏந்தினார். வலப்பக்கம் சிவனுமாக, இடப்பக்கம் பார்வதியாக உள்ள திருக்கோலமே அர்த்த நாரீஸ்வர மூர்த்தி யாகும். அவரை தரிசிக்க நாம் செல்ல வேண்டிய தலம் திருக்கோடாகும். ஈரோடு அருகேயுள்ள இத்தலம் சிவபெருமானுடையது என்றாலும் இளைய பிள்ளையாரான முருகனுக்கு உகந்தது ஆகும். இங்குள்ள இறைவன் பெயர் அர்த்த நாரீஸ்வரர், இறைவி பெயர் பாகம்பிரியாள் என்பதாகும். ஆணாகவும், பெண்ணாகவும் இங்குள்ள இறைவன் காட்சியளிக்கிறார். கணவன் - மணைவி இருவரும் ஒருவர்க்கு ஒருவர் விட்டுக் கொடுத்து வாழவும், குடும்பத்தில் ஒற்றுமை, அமைதி நிலவவும் இந்த மூர்த்தியை வணங்கினால் கைகூடும். வில்வ, தும்பை, கொன்றை மலர் அர்ச்சனையும், சர்க்கரைப் பொங்கல் (அல்லது) நெய்யன்ன நைவேத்தியமும், திங்கள், பிரதோஷ, பௌர்ணமி தினங்களில் கொடுக்க பிரிந்த தம்பதியர் ஒன்று சேர்வர் என்பது ஐதீகம். மேலும் இங்குள்ள சிவபெருமானுக்கு பசும்பால் அபிசேகம் செய்தால் குடும்பம் ஒற்றுமையுடன் காணப்படும்.



# 23. கஜயுக்த மூர்த்தி




கயாசுரன் எனும் அசுரன் காளமேகம் போன்றதொரு யானை உருவம் ஏற்றவன். அவன் மேருமலையின் மேல் நான்முகனை நினைத்து கடும்தவம் மேற்க்கொண்டான். உடன் நான்முகன் தோன்றினான் கயாசுரன் யாராலும் அழிவில்லா நிலையும் எதிலும் வெற்றி கிடைக்கவும் வரம் கேட்டான். உடன் கிடைத்தது. ஆனால் சிவனை மட்டும் எதிர்ப்பாயானால் நீ இறப்பாய் என்ற கடுமையான தண்டனையும் கிடைத்தது. அவன் தனதுவேலைகளைக் காட்டத் தொடங்கினான். சிவபெருமானை விடுத்து அனைவரிடத்திலும் தன் தொல்லைகளையும், கொடுமைகளையும் தொடர்ந்தான். இந்திரனும் அவனிடம் போரிட முடியாமல் தோற்றான். உடன் அவனது வாகனமான ஐராவத்தின் வாலைப் பிடித்திழுத்து தூர எறிந்தான். பின் அமராவதி நகரை அழித்தான். அதோடு தன் குலத்தாரையும், இராட்சதக் கூட்டத்தினரையும் உலகமக்கள் அனைவரையும் கொடுமைப் படுத்தினான். பாதிக்கப்பட்டோர் சிவபெருமானிடம்



சரணடைந்தனர். அவரைத் தேடி காசிக்கு சென்றனர். அங்கே யொரு ஆலயத்தில் சிவபெருமான் பார்வதி தேவியிடன் வீற்றிருந்தார். வந்தவர்கள் அனைவரும் சிவபெருமான் முன் இறைவா! எங்களைக் காக்க வேண்டும். நான்முகனிடம் அழியாவரம் வாங்கிய தயாசுரன் இங்கு வந்து கொண்டுள்ளான். அவனை அழித்து எங்களைக் காக்க வேண்டும் என்று மன்றாடினர். பின்னாலேயே வந்த கயாசுரன் தான் எதிர்க்கக் கூடாதது சிவபெருமான் என்பதை அக்கணத்தில் மறந்தான். ஆலயவாசல் முன் நின்று அனைவரும் பயப்படும் படியாக கர்ண கொடூரமாக சத்தமிட்டான். இதனைக் கேட்டோர் சிவபெருமானைத் தழுவிக்கொண்டனர். அவர்களுக்கு ஆறுதல் கூறியபடியே தேவகணத்தினரே பயப்படும் படியாகப் பெரிய வடிவம் எடுத்தார். அனைவரும் பயப்படும் படி கண்களின் வழியே தீ சுவாலைகள் தெரித்தது.

கயாசுரனை தனது திருவடியால் உதைக்க, அவன் கழிந்த கோலத்தில் உலகின் மீது விழுந்தான். மற்றொரு திருவடியால் அவனது தலையை மிதித்து தொடையில் ஊன்றியவாறே தனது நகங்களால் பிளந்து அவனது தோலை கதறக் கதற உரித்திழுத்தார். அச்சமயத்தில் பார்வதி தேவியே அஞ்சினார். அவரது தோற்றத்தைக் கண்டோர் கண்ணொளி இழந்தனர். கயாசுரனின் தோலை தன் மீது போர்த்தி சாந்த மடைந்தார். கயாசுரனின் தொல்லை நீக்கப் பெற்றோர் நிம்மதியுடன் தங்களது இருப்பிடம் சென்றனர். கஜாசுரனுடன் சண்டையிட்டு வென்றதால் அவரது பெயர் அவரது பெயர் கஜயுக்த மூர்த்தி யாகும். அவரை தரிசிக்க திருவழுவூர் செல்ல வேண்டும். இங்கே தாரகாபுரத்து முனிவர்கள் யாகத்தில் தோன்றிய யானையைச் சிவனாரே அழிக்க ஏவினார். சிவபெருமான் இதனால் அணிமாசித்தி மூலம் யானையின் உடலில் சென்று, பின் உடலைக் கிழித்தப் படி வெளி வந்தார். எனவே அவரை கஜசம்கார மூர்த்தி என்றும் அழைப்போம். இங்குள்ள கஜசம்ஹார மூர்த்திக்கு அபிசேக ஆராதனை செய்ய சனீஸ்வர தோஷம் விலகும். ஏழரை சனியின் கொடுமையில் இருந்து தப்பிக்கலாம். 12 அமாவாசை காலையில் விஸ்வ ரூப தரிசனம் பார்த்தால் குழந்தை பாக்கியம் கிட்டும். அருகம்புல் அர்ச்சனையும், பாயாச நைவேத்தியமும் சோம வாரங்களில் கொடுக்க எதிரி தொல்லை தீரும். கஜசம்கார மூர்த்திக்கு எழுமிச்சை சாறு அபிசேகம் செய்தால் மரண பயம் தீரும்.



# 24. ஜ்வராபக்ன மூர்த்தி



மாபலி மன்னனின் மகன் வாணாசுரன். அவனுக்கு ஆயிரம் கைகள் உண்டு. அவனது மனைவி சுப்ரதீகை. அவன் நர்மதை நதியோரத்தில் ஒரு சிவலிங்கம் அமைத்து அதற்கு தினமும் ஆயிரம் முறை அர்ச்சனை செய்து வந்தான். சிவபெருமான் காட்சி கொடுத்து என்ன வரம் வேண்டும் என்று கேட்டார். அதற்கு உலகம் முழுவதும் அரசாட்சி செய்யவும், நெருப்பினால் ஆன மதில் சுவரும், அழிவற்ற நிலையும், தேவர் அடித்தாமரை அன்பும் வேண்டுமெனக் கேட்டான். அதன்படியே கொடுத்தார். இதனால் உலகம் முழுவதையும் தன் வசம் கொண்டான். மீண்டுமொருமுறை சிவபெருமானை தரிசிக்க விரும்பி வெள்ளிமலை அடைந்தான். அங்கு ஆயுரம் கைகளிலும் குடமுழா வாசித்தான். மீண்டும் சிவபெருமான் என்ன வரம் வேண்டும் என்று கேட்டதிற்கு இறைவா தாங்கள் தங்கள் குடும்பத்தினருடன் எனது சோணிதபுரத்தில் வசிக்க வேண்டும் என்றுக் கேட்டான். பின் சிவபெருமான் குடும்ப சமேதராய் அவனது



மாளிகையிலேயே வாழ்ந்து வந்தார். இந்நிலையில் வாணாசுரன் தேவர் உலகத்தினர் அனைவரையும் போருக்கு இழுத்து தோற்கடித்ததால் அனைவரும் ஓடி விட்டனர். எøவே தன்னுடன் போர்புரியும் படி சிவனை அழைத்தான் . சிவனோ எனக்கு பதிலாக கண்ணன் வருவான் என்றார். கண்ணன் எப்பொழுது வருவான்? என்று கேட்டார். சிவனும் உன் மகள் கண்ணன் மகனை விரும்புவாள் அந்த செய்தி கிடைக்கும் போது வருவான் என்றார். அதன்படி நடைபெற்றது. வாணாசுரனின் மகள் உஷைக்கும், கண்ணன் மகன் அநிருத்தக்கும் காதல் ஏற்பட்டது. இதனையறிந்த கண்ணன் வாணாசுரனுடன் போர்புரிய வந்தான். முதலில் உள்ள வாசலில் விநாயகனை வணங்கினான். இரண்டாம் வாசலில் முருகனை வணங்கினான். மூன்றாம் வாசலில் உமாதேவியரிடம் ஆசி வாங்கி உள் சென்றான். அங்கே நான்காவது வாசலில் சிவபெருமானை கண்டான். உடன் சிவபெருமான் சண்டைக்கு கண்ணனை அழைத்தார்.

கண்ணன் பின் வாங்கினான். இருப்பினும் சிவபெருமான் தேற்றி, வாணாசுரனிடம் நடைபெறும் சண்டையில் நீயே வெல்வாய், அதற்கு முன் எண்ணிடம் போர் புரி என்ற படியே இருவருக்கும் போர் நடைபெற்றுக் கொண்டே யிருந்தது. எத்தனைக் காலமேன யாராலும் சொல்ல முடியாத படி நீண்டது. முடிவில் சிவபெருமான் ஒதுங்க போர் நின்றது. பின் வாணாசுரனுடன் படு பயங்கரப் போர் நடைப்பெற்றது. இறுதியில் அவனது கரங்கள் ஒவ்வொன்றும் துண்டானது. சிவனை தொழுத கைகள் மட்டும் வெட்டாமல் விடப்பட்டது. மனமாறிய வாணாசுரன் மன்னிப்பு வேண்ட, மன்னிக்கப்பட்டு மறுபடியும் அவனது கரங்கள் இணைந்தன. அவன் மறுபடியும் குடமுழா வாசிக்க பணியமர்த்தப் பட்டான். அவனது மகள் உஷைக்கும், கண்ணன் மகன் அநிருத்தனுக்கும் திருமணம் நடைபெற்றது. கண்ணன் - சிவபெருமான் இடையே நடைபெற்ற போரில் தொடுத்த சீதள சுரத்தை, சிவபெருமான் விட்ட உஷ்ண சுரமானது ஒரு கணத்தில் வென்றது. அது மூன்று சிரம், நான்கு கரம், ஒன்பது விழிகள், மூன்று கால்களுடன் இருந்தது. தீராத சுரம் கண்டோர் இந்த வடிவை வணங்க சுரம் குறையும். இவ்வுருவமே ஜ்வராபக்ன மூர்த்தி யாகும். அவரை நாகபட்டிணம் அருகேயுள்ள சாட்டியகுடியில் காணலாம். வேதநாயகி இறைவி திருநாமமாகும். வெப்ப நோய்க்குரிய தேவதை ஜ்வர தேவர் ஆவார். இங்குள்ள அவரை வணங்க வெப்ப நோயின் தீவிரம் குறையும். வெள்ளை அல்லி அர்ச்சனையும், சுக்கு கசாய நைவேத்தியமும் புதன் சோம வாரங்களில் கொடுக்க நோய் தீரும். மேலும் இறைவனுக்கு பசுந்தயிர் அபிசேகம் செய்ய சுரம் குறையும்.



# 25.சார்த்தூலஹர மூர்த்தி



தாருவனத்தில் வாழ்ந்து வந்த முனிவர்களை மோகினி அவதாரமெடுத்த திருமால் சோதித்தார். அம்முனிவர்களின் ரிஷிபத்தினிகளை பிட்சாடன அவதாரமெடுத்து சிவபெருமான் சோதித்தார். இதனையெல்லாம் ஞானதிருஷ்டியில் கண்ட முனிவர்கள் வேள்வியால் சிவபெருமானை அழிக்கமுடிவு செய்தனர். எனவே பிறர்க்கு தீங்கு செய்யக்கூடிய அபிசார ஹோமம் வார்த்தனர். அதிலிருந்து இடிமுழக்கம் போன்ற சத்தத்துடன், கூர்மையான பற்கள், அகண்ட வாய், தீச்சுடர் பொங்கும் விழிகளுடன் ஒரு புலி வந்தது. அதனைக் கொண்டு சிவபெருமானிடம் ஏவினர். அதனை அடக்கிய சிவபெருமான் அதனைக் கொன்று தோலினை ஆடையாக்கினார். மீண்டும் எவற்றையும் எதிர்க்கும் இணையில்லா மழு எனும் ஆயுதத்தை ஏவினர். அதனை சிவபெருமான் தனது படையாக மாற்றினார். பின் மான் வான் மார்க்கமாக உலகமே அச்சுறுத்தும்படி வந்தது. அதைத்தனது



இடக்கரத்தில் ஏந்தினார். பின் நாகம் வந்தது அதனை ஆபரணமாக்கி அணிந்துக் கொண்டார். பின் அடக்கமுடியாத பூதகணங்களை ஏவினர். அவையும் சிவபெருமானின் படைப்பரிவாரமாகின. பின்னர் வெண்ணிற மண்டையோடு உலகமே அதிரும்படி வந்தது. அதை அடக்கி தன் தலையில் அணிந்தார்.

பின்னர் கர்ணகடூர ஓசையுடன் துடி (உடுக்கை) அனுப்பினர். அதனை தனதாக்கினார். பின் முயலகனை ஏவினர். அதனைக்கண்ட சிவபெருமான் நெருப்பைக் கையில் ஏந்தியபடி முயலகனைத் தன் காலினால் நிலத்தில் தள்ளி அதன் முதுகில் ஏறி நின்றார். இனியும் சிவபெருமானை ஒன்றும் செய்ய இயலாது என்<றுணர்ந்த முனிவர்கள் திகைத்தனர். முண்டகன் அசைந்ததால் சிவபெருமான் நடனம் ஆட ஆரம்பித்தார். இதனைக் கண்ட முனிவர்கள் அவரைச் சரணடைந்தனர். சிவபெருமான் அவர்களுக்கு மன்னிப்பை வழங்கி ஆசி கூறி அனுப்பினார். பின் அவரவர் இருப்பிடம் திரும்பினர். முனிவர் ஏவிய புலித்தோலை ஆடையாகக் கொண்ட கோலத்தை நாம் சார்த்தூலஹர மூர்த்தி என்கிறோம். மாயவரம் அருகே அமைந்த வழுவூரில் தான் தாருவனத்து முனிவர்கள் ஏவிய புலியை அடக்க இங்கு சிவபெருமான் தோன்றினார். இங்குள்ள மூலவரின் பின்னால் அபிசார இயந்திரம் உள்ளது. அதற்கு சந்தன காப்பிட்டு வழிபட பில்லி, சூனிய செய்வினை முறியும். ஏழு பிரதோஷம் இறைவனுக்கு அபிசேக ஆராதனை செய்ய இழந்த சொத்துக்கள் மீண்டும் கைவரும். தும்பை, வில்வார்ச்சனையும், தயிரன்ன நைவேத்தியமும் திங்கள், வியாழக் கிழமைகளில் செய்ய மோட்சம் கிடைக்கும் என்பது ஐதீகம். மேலும் இம்மூர்த்திக்கு ருத்திராட்ச அபிசேகம் செய்ய செய்வினை அக<லும் முடியும்.



# 26. பாசுபத மூர்த்தி



பாரதப் போர் நடைபெற்ற சமயம் அபிமன்யூவை சயந்திரன் எனும் மன்னன் கொன்றான். இதனால் கோபம் கொண்ட அர்ச்சுனன் என் மகனைக் கொன்றவனை நாளை மாலைக்குள் வீழ்த்துவேன் அல்லவெனில் உயிர் மாய்ப்பேன் என சபதம் செய்தான். அப்போது மைத்துனனும், தேரோட்டியும், தோழனுமான கண்ணன் அவனைத் தனியாக அழைத்துச் சென்று தேற்றினான். பின் அர்ச்சுனன் பசியாற கனிகளைப் பறித்து கொடுத்தான். அவனும் நான் தினமும் சிவபெருமானை பூஜிக்காமல் உண்ணமாட்டேன் என்றான். கண்ணன் இன்று என்னையே சிவனாக எண்ணி பூஜிப்பாயாக என்றான். அர்ச்சுனன்னும் அவ்வாறே பூஜித்து பசியாறினான். பின் சிறிது கண் அயர்ந்தான். அவனது கனவில் கண்ணன் வந்தான், வந்து மைத்துனா ! சிந்து மன்னனை அழிக்க நாம் கையிலை சென்று சிவனை வணங்கி சூரிய உதயத்திற்கு முன் வந்து விட வேண்டும் என்றான். இருவரும் கையிலை சென்றனர். சிவபெருமான் பார்வதியை வணங்கி தாங்கள் வந்த விவரத்தைக்



கூறினர். சிவபெருமான் அருகே அர்ச்சுனன் அர்ச்சித்த மலர்கள் இருந்தன. இதனைக் கண்ட அர்ச்சுனன் மகிழ்ந்தான். பின்னர் சிவபெருமான் தடாகத்திலிருந்து எதிரியை அழிக்க வல்ல பாசுபதத்தை கொடுத்து (முஷ்டி நிலை என்பது நினைவாலும் மறவாத தன்மை) இருவரும் சிவபெருமானுக்கு நன்றி கூறி வணங்கினர்.

சிவபெருமானும் பாரதப் போரில் வெற்றி உண்டாக வாழ்த்தினார். உடன் இருவரும் சிவபெருமானை வலம் வந்து தங்கள் நினைவுலகம் வந்து சேர்ந்தனர். அர்ச்சுனன் இவ்வாறு கனவு கண்டு உடன் கண் விழித்துப் பார்க்கையில் தன்னுடைய அம்பறாத்தாணியில் புது வகையான அம்பு அதாவது பாசுபதம் இருப்பதைக் கண்ட அர்ச்சுனன் மீண்டுமொரு முறை சிவபெருமானையும், கண்ணனையும் வணங்கினான். அர்ச்சுனனும் அன்றே சிவபெருமான் கொடுத்த பாசுபதத்தினால் சயந்திரனைக் கொன்று சபதத்தை நிறைவேற்றினான். கண்ணனும், அர்ச்சுனனும் வேண்டிய வண்ணம் பாசுபதத்தை அருளிய நிலையிலுள்ள மூர்த்தமே பாசுபத மூர்த்தி யாகும். குடவாசல் அருகே உள்ளது கொள்ளம்புதூர். இங்குள்ள இறைவன் பெயர் வில்வவனநாதர், இறைவி பெயர் சௌந்தர நாயகி என்பதாகும். இத்தல இறைவனை நாள்தோறும் வணங்கினால் பிறவிப் பெருங்கடல் நிந்தி இறைவனை அடையலாம்.சிவப்பு நிற மலர் அர்ச்சனையும், மஞ்சளன்ன நைவேத்தியமும், வியாழன், செவ்வாய் கிழமைகளில் கொடுக்க எதிரி நீங்குவர், கடன் தொல்லைத் தீரும். மேலும் இங்குள்ள இறைவனை கும்பநீரால் அபிஷேகம் செய்ய பிறவிப் பயன் எய்துவர்.



# 27.கங்காள முர்த்தி




ஒரு முறை சிவாலயத்துள் எரிந்து கொண்டிருந்த விளக்கின் திரியைத் தூண்டிப்பிரகாசமாக எரிய உபகாரம் செய்தது ஒரு எலி. எனவே அவ்வெலிக்கு திரிலோகமும் ஆட்சி செய்யும் அமைப்பை வழங்கினார் சிவபெருமான். அவ்வெலி மாவிலி(மகாபலி) மன்னன் என்ற என்ற பெயருடன் அசுரகுலத்தின் அசுரவேக வளர்ச்சியைக் கண்ட தேவர்குலம் மாவிலி மன்னனுடன் போரிட்டனர். போரில் அசுர குலம் ஜெயிக்கவே தேவர்குலம் பயந்து திருமாலிடம் முறையிட்டனர். திருமாலை மகனாக அடைய வேண்டி காசிப முனிவரின் மனைவியான திதி என்பவள் வரம் கேட்க, அதன்படியே அவர்களுடைய மகனாக வாமன அவதாரம் ஆகப்பிறந்தார். மாவிலி அசுரனாக இருந்தாலும் தானதர்மங்களிலும், யாகங்கள் இயற்றுவதிலும் சிறந்தவனாக விளங்கினான். இந்நிலையில் வாமனன் மாவிலி அரண்மனைக்குச் சென்று மூன்றடி மண் கேட்டார். வந்திருப்பது திருமாலே எனவே தானம்தர ஒப்புக்கொள்ள வேண்டாமென அசுரகுருவான சுக்கிராச்சாரியார்



தடுத்தார். இருப்பினும் கேளாமல் மூன்றடி மண் தானம் தர ஒப்புக் கொண்டார். உடனே திரிவிக்கிரம அவதாரம் எடுத்த திருமால் ஓரடியால் பூலோகத்தையும், மற்றொரு அடியால் தேவலோகத்தையும், மூன்றாவது அடிக்கு இடமில்லையே என்றுக் கூற மாவிலி தன் சிரம்மேல் மூன்றாவது அடியை அளக்குமாறுக் கூறினான். அதன்படி அவன் சிரம் மீது கால்வைத்து அழுத்த அவன் பாதாள லோகத்தில் அமிழ்ந்தான். மாவிலியை அழித்த திருமால் மிக்க கர்வம் கொண்டு மனிதர்களையும், தேவர்களையும் வம்பிற்கிழுத்தார். இதனால் பதற்றமடைந்த தேவர்குலம் கையிலை மலைக்கு சென்று நந்திதேவரின் அனுமதியுடன் சிவபெருமானை சந்தித்து விவரம் கூறினர். சிவபெருமான் வாமனரை சந்தித்து அமைதி கொள்ள வேண்டினார் ஆனால் கர்வமடங்காத திருமாலுக்கு பாடம்புகட்ட எண்ணினார். தன் திருக்கை வச்சிரதண்டம் எடுத்து வாமனன் மார்பில் அடித்தார் வாமனன் நிலம் வீழ்ந்தார். உடன் அவனது தோலை உறித்து மேல் ஆடையாக்கி,முதுகெலும்பினை பிடுங்கி தண்டாக கையில் தரித்துக் கொண்டு தேவர் துயர் துடைத்தார். கர்வம் ஒழிந்த திருமால் சிவபெருமானிடம் வாமன அவதாரத்தின் நோக்கம் பற்றிச் சொல்லி மன்னிப்புக் கேட்டு வைகுண்டம் சென்றார். பின்னர் மாவிலி மன்னனும் மோட்சமடைந்தார். சிவபெருமான் வாமனரின் முதுகெலும்பை கையில் தண்டாக மாற்றிக் கொண்ட கோலமே கங்காள மூர்த்தி என்றழைக்கப்படுகிறது (கங்காளம் - எலும்பு).

சீர்காழியில் கோயில் கொண்டுள்ள சட்டைநாதர், பிரம்மபுரீஸ்வரர், தோணியப்பர் என்ற பெயரில் அழைக்கப்படுகின்றார். இறைவி பெயர் பெரியநாயகி திருநிலைநாயகியாகும். இங்குள்ள சுகாசனமூர்த்தியை வணங்கி அர்ச்சித்தால் வியாழன் தொடர்புடைய தோஷங்களும் தீரும். தொழில் வளர்ச்சி பெருகும். நல்ல நிர்வாகத்திறமை வெளிப்படும். இவருக்கு நந்தியவர்த்த அர்ச்சனையும், சித்திரான்ன நைவேத்தியமும் பௌர்ணமி சோம வாரங்களில் கொடுக்க கேது தோஷம் தீரும். குழந்தை பாக்கியம் உண்டாகும். மேலும் இங்குள்ள மூர்த்திக்கு தர்பை நீரால் அபிசேகம் செய்தால் யோக சித்தி கிடைக்கும்.



# 28. கேசவார்த்த மூர்த்தி




முன்னொரு காலத்தில் திருமால் சிவபெருமானை நோக்கி தவமியற்றினார். சிவபெருமான் திருமாலின் தவத்தினால் மெச்சி என்ன வரம் வேண்டும் ? என்றுக் கேட்டார். உடன் திருமாலும் தேவர்களும், அசுரர்களும் மயங்கத்தக்க மாயை தனக்கு வேண்டும்மென்றும், தேவர்களும் அழிக்கமுடியாதபடியான வல்லமையும் வேண்டுமென்றார். சிவபெருமான் கேட்ட வரங்களைத் தந்துவிட்டு திருமாலை மாயன் என அழைத்தார். நீயே என் இடபுறமாக இருப்பாய் என்று மறைந்தார். அத்தகைய வரம்பெற்ற திருமாலே பராசக்தியாகவும் பார்வதியாகவும் ஆணுருக் கொள்கையில் திருமாலாகவும், கோபமுற்ற நிலையில் காளியாகவும், போர்க் காலங்களில் துர்க்கையாகவும் விளங்குகிறார். ஒருமுறை உமாதேவியார் சிவபெருமானை குறித்து சிறந்த தான சோமவார விரதம் மேற்கொண்டார். பின் விரதம் முடிந்து அன்னதானம் நடைபெறும் போது அவரது தவச் செயலை நேரில்



காண சிவபெருமான் வேதியராகவும், அவரருகே பெண்ணுருவில் திருமாலும் மாறி, தவச்சாலைக்கு வந்து விரதத்தில் மகிழ்ந்து இருவரும் சுயரூபம் காட்டினர்.

அதாவது சிவம் வேறு, திருமால் வேறல்ல. திருமாலே சிவசக்தியாகும். ஆண்பாகம் வலதாகவும் பெண்பாகம் இடதாகவும் உள்ளக் காரணத்தால் சிவனிலிருந்து பிரிந்தவரையே நாம் திருமால் என்போம். இத்தகைய சிறப்புப் பெற்ற இருவரையும் நாம் எப்படிப் பார்க்கலாமெனில் வலப்புறம் மான், மழு தாங்கியுள்ளவர் சிவனென்றும், இடபுறமாக சக்கராதாரியாக உள்ளவர் திருமாலென்றும் அவ்விருவரும் இணைந்துள்ள நிலையை நாம் சங்கர நாராயணன் என்றும் கூறுவோம். இத்தகைய சிறப்பான கேசவனைப் பாதியாகவும், தான் பாதியாகவும் அமைந்துள்ள திருவுருவத்தையே நாம் கேசவார்த்த மூர்த்தி என்போம். இத்திருவுருவத்தை அரிகரம் என்னும் இடத்தில் காணமுடியும். இங்கு நாம் தரிசிக்கப் போவது சங்கர நாராயணனை. நெல்லை செல்லும் வழியில் உள்ளது சங்கரன் கோயில். இங்குள்ள இறைவன் சங்கர நாராயணன் இறைவி கோமதி அம்மையார். இங்குள்ள இறைவனை வேண்ட எலும்பு, நரம்பு சம்பந்தப்பட்ட வியாதிகள் தீரும், மேலும் முழுக்குணம் பெற்றதும் பாதிக்கப்பட்ட பகுதியாக கிடைக்கும் அங்கப்பொருட்களை (உதாரணம் கை-கால்) <உண்டியலில் சேர்க்கின்றனர். இந்த இறைவியின் எதிரேயுள்ள கருங்கல் தரையில் ஆறு அங்குல வட்டமுடைய குழி போன்ற அமைப்பு உள்ளது. அதில் அமர்ந்து சிவதியானமோ, தியானமோ செய்ய குண்டலினி பகுதிக்கு ஒருவித ஈர்ப்பு கிடைக்கின்றது. இங்கு புற்றுமண்னே பிரசாதமாகக் கொடுக்கப்படுகின்றது. வில்வார்ச்சனையும், சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியமும், புதன் அல்லது சோமவாரங்களில் செய்ய மறுபிறவியிலும் மோட்சம் கிட்டும். மேலும் இங்குள்ள தெப்பத்தில் உள்ள மீனிற்கு பொரியும், யானைக்கு வெல்லமும் கொடுத்தல் வேண்டும். உடல்ஊனமுற்ற சாதுக்களுக்கு அன்னதானம் செய்துவிட்டு இறைவனை வணங்கினால் கடுமையான நோய் விலகும் என்பது ஐதீகம்.



# 29. பிட்சாடன மூர்த்தி




தாருகாவனத்து முனிவர்கள் சிவபக்தியை விட யாகமே சிறந்தது என்று மமதையில் எண்ணற்ற யாகங்கள் செய்யலானார்கள். அவர்கள் மமதையை அடக்க சிவபெருமான் எண்ணினான். <உடன் திருமாலை அழைத்து முன்னொறு முறை எடுத்த மோகினி <உருவத்துடன் வரவேண்டினார். திருமாலும் அக்கணமே மோகினியாக மாறினார். சிவபெருமானும் கபாலமும், சூலமும் கையில் கொண்டு பிட்சாடனராக மாறினார். இருவரும் தாருகாவனம் அடைந்தனர். அவ்வனத்தில் தவத்தில் ஈடுபட்டிருந்த முனிவர்கள் மோகினியைக் கண்டு ஆசைக் கொண்டு அவரது பின்னாலே அலைந்தனர். இதற்கிடையே சிவபெருமான் முனிபத்தினிகள் வசிக்கும் வீதியில் பிச்சை கேட்கும் பிட்சாடனராக மாறி, ஓசையுடன் பாடியவாறே சென்றார். இவ்வோசையைக் கேட்ட முனிபத்தினிகள் அவரையும், அவரது பாடலையும் கேட்டு மயங்கினார். சிலர் அவர் மேல் காதல் வயப்பட்டனர்.



இதனால் முனிபத்தினிகளின் களங்கமற்ற கற்பு களங்கமுற்றது. மோகினியால் தவநிலை இழந்த முனிவர்கள் வீடுவர, இங்கே பிட்சாடனரால் நெறிதவறிய தன் மனையை நோக்கிய முனிவர்கள் இதற்கெல்லாம் காரணம் என்னவென்று அறிய விரும்பினார். மேலும் பிட்சாடனரின் பின்னாலே தொடர்ந்து சென்றுக் கொண்டிருந்த முனிவர்களின் பத்தினிகள் ஒருவாறு மயக்கம் தெளிந்து கணவனுடன் இணைந்தனர். பின்னர் மோகினியான திருமாலும், பிட்சாடனரான சிவபெருமானும் திருத்தளிச்சேரி எனும் ஊரில் மறைந்தருளினர்.

பின்னர் சிவபெருமானை அழிக்க எண்ணிய முனிவர்கள் அபிசார யாகம் இயற்றி, அதிலிருந்து வெளிவரும் பொருளினால் சிவபெருமானை கொல்ல ஏவினர். ஆனால் அவர் அவற்றையெல்லாம் ஆடையாகவும், ஆபணமாகவும் அணிந்துக் கொண்டார். அதன்பின் இருவரும் கையிலை சென்றார்கள். தாருவன முனிவர்களின் தவத்தையும், முனிபத்தினிகளின் கற்பையும் சோதிக்க சிவபெருமான் எடுத்த உருவமே பிட்சாடன மூர்த்தி யாகும். அவரை தரிசிக்க நாம் வழுவூர் செல்ல வேண்டும் மயிலாடுதுறையருகே <உள்ள இவ்வுரிலே தாருகாவனத்து முனிவர்களின் மமதøயை அடக்க சிவபெருமான் பிட்சாடனராக எழுந்தருளினார். இவரை வணங்க பேரின்ப வழியையும், விருப்பு வெருப்பற்ற வாழ்க்கையயும் அடையலாம். சந்நியாசிகளும், முனிவர்களும், ரிஷிகளும் இந்தப் பிட்சாடனரை மனப்பூர்வமாக வணங்கினால் சித்திக் கிடைக்கும். மேலும் வில்வார்ச்சனையும், தேங்காய் நைவேத்தியமும் வியாழக்கிழமைகளில் செய்ய எதிரிகளின் கர்வம் அழியும். யாரையும் வெல்லும் வசியமுண்டாகும். இந்த பிட்சாடனமூர்த்திக்கு அன்னாபிசேகம் செய்ய பேறு பெற்ற பெருவாழ்வு தித்திக்கும்.



# 30. சிம்ஹக்ன (சரப) மூர்த்தி




இரண்ய கசிபு என்னும் அசுரன் சிவபெருமானிடம் அளவில்லா பக்தி கொண்டவன். அவவொருமுறை அசுர குருவான சுக்ராச்சாரியாரின் யோசனைப்படி சிவபெருமானை நோக்கித் தவமிருந்தான். தவத்தில் மெச்சிய சிவபெருமான் அவனுக்கு காட்சிக் கொடுத்து "என்ன வரம் வேண்டுமென்று கேட்க அவனோ ஐம்பூதங்களும், கருவி, வானவர், மனிதர், பறவை, விலங்குகள், இரவு, பகல் என மேற்ச் சொன்ன எவற்றினாலும் நான் இறவாதிருக்க வரம் வேண்டும் என்றான். அப்படியே கொடுத்து மறைந்தார். தான்பெற்ற வரத்தினால் மூவுலகினரையும் அச்சுறுத்தினான். தேவகன்னிகளை விசிறி வீசவும், இந்திரன், நான்முகன் போன்றோர் தினசரி வந்து தன்னை வணங்கிவிட்டு செல்ல வேண்டும் என்றும் தன்னைத் தவிர மற்றவர்களை வணங்கக் கூடாது என்றும் ஆணையிட்டான். அவனுக்கு பயந்து அனைவரும் "இரண்யாய நமஹ கூறினர். ஆனால் அவனது



மகனோ "ஸ்ரீ நாராயணாய நமஹ என்றான். இதனால் ஆத்திரமடைந்த இரண்யன் பிரகலாதனுக்கு பலவித தொல்லைகளையும், கொலை முயற்சியும் செய்தான். ஒன்றுமே பலிக்கவில்லை. அனைத்திலுமே நாராயணன் காத்தருளினார். மகனான பிரகலாதன் சதாசர்வ காலமும் நாராயணனை பூஜிப்பதால் ஆத்திரம் அடைந்த இரண்யன் ஒருநாள் "எங்கே இருக்கிறான் உன் நாராயணன் ? என்றுக் கேட்டார். இதோ தூணில் இருக்கிறார், துரும்பிலும் இருக்கிறார் என்றான். இதோ இந்தத் தூணில் இருக்கிறாரா உன் நாராயணன் என்றபடியே தூணைப் பிளந்தான். பிளந்த தூணின் <உள்ளிருந்து நரசிம்மர் தோன்றினார். மாலை நேரத்தில் மனிதனும் அல்லாது, மிருகமும் அல்ல நரசிம்மமாகத் தோன்றி இரண்யனைக் கொன்று அவன் குடலை மாலையாக்கிக் கொண்டார். அவனது இரத்தம் குடித்தார். இதனைக் கண்ட அனைவரும் பயந்தனர். அசுரனின் இரத்தம் குடித்த வெறியால் நரசிம்மர் மனிதர்களையும் <உண்ணத் தொடங்கினார். இதனைச் சிவபெருமானிடம் முறையிட, சிவபெருமான் இருதலை, இருசிறகுகள், கூர்மையான நகம், எட்டுக்கால்கள், நீண்டவால், பேரிரைச்சலை உண்டுபண்ணியபடி "சரப அவதாரமாக மாறினார். பின் நரசிம்மரை அணுகினார், இடிமுழக்கம் போல் கத்தியபடி நரசிம்மிரின் தலையையும், கைகளயும் துண்டித்து அதன் தோலை <உரித்து தன்னுடலில் போர்வையாக அணிந்து கொண்டு கையிலையை அடைந்தார். பின் சிவபெருமானை வணங்கி சாந்தப்பட்ட திருமால் வைகுண்டம் அடைந்தார். இரண்யகசிபுவைக் கொன்ற நரசிம்மத்தின் அகந்தையை அழிக்க சிவபெருமான் கொண்ட காலமே "சிம்ஹக்ன மூர்த்தி யாகும்.

அவரை தரிசிக்க கும்பகோணம் அருகேயுள்ள "திர்புவனம் செல்ல வேண்டும். இங்கேயுள்ள சரபமூர்த்திக்கு ராகுகாலத்தில் விளக்கேற்றி சகஸ்ரநாமம் சொல்ல திருமணம் கைகூடிவரும். தடைகள் விலகிடும். அவர் முன்பு சரப யாகம் செய்தால் விலகிடுவர். சென்னையிலுள்ள கோயம்பேட்டிலு<ள்ள சரப மூர்த்திக் கோயில் உள்ளது. ஞாயிற்றுக்கிழமை ராகுகாலங்களில் இங்குள்ள சரப மூர்த்தியை வழிபட்டால் நினைத்து நடைபெறுகிறது, பதவி உயர்வு கிடைக்கிறது குடும்ப அமைதி பெருகுகிறது. இவர்க்கு திராட்சை ரச அபிசேகம் செய்ய திடவான உடல்வாகு கிடைக்கும். செந்நிற தாமரைமலர் அர்ச்சனையும், பானக நைவேத்தியமும் பிரதோஷம், திங்கற்கிழமையில் கொடுக்க வெற்றி, தடைஅகன்று விடும். சந்தோஷமான அமைதியான குடும்ப வாழ்வு ஏற்படும்.



# 31. சண்டேச அனுக்கிரக மூர்த்தி



திருசேய்ஞலூரில் வாழ்ந்து வந்தான் யஜ்ஞதத்தன். அவன் மனைவி பத்திரை. இவர்களது மகனாக விசாரசருமர் என்பவன் இருந்தான். விசாரசருமர் பிறக்கும்போதே முன்ஜென்ம அறிவின் பயனாக நல்லறிவுடன் பிறந்தான். யாரிடமும் வேதம் பயிலாமல் தானே உணரும் அறிவைப் பெற்றிருந்தான். ஏழுவயதில் அவருக்கு <உபநயனம் செய்தனர். எந்த ஆசிரியரிடமும் கற்காமல் தானே அனைத்தையும் <உணர்ந்து வேதாகம சொற்படி வாழ்ந்து வந்தான். அவனுக்கு ஐந்தொழில்கள் செய்து எம்மை வழிநடத்த உரியவர் சிவபெருமான் ஒருவரே என தீர்மானமாக நம்பியிருந்தான். அவ்வாறிருக்கையில் அவனுடன் இருக்கும் ஒரு அந்தணச் சிறுவன் பசுவை அடிப்பதைக்கண்டான் விசாரசருமர். உடன் பசு மேய்க்கும் வேலையை அவனே செய்யலானான். கோமாதாவின் அருமை பெருமைகளை <உணர்ந்ததால் அத்தொழிலைச் சிறப்பாகச் செய்தான்.



சரியான முறையில் அவற்றை அன்புடன் பராமரித்தான். அதனால் அவை முன்பை விட அதிகளவில் பால் கொடுத்தது. இதற்கிடையே அங்குள்ள மண்ணி ஆற்றங்கரையின் மணல்மேட்டில் உள்ள அத்திமரத்தின் கீழே மணலிங்கம் செய்து கோயில், கோபுரம், மதில் போன்றவற்றை மணலாலே அமைத்து சிவபெருமானுக்கு பூஜைசெய்து பாலபிசேகம் செய்து வழிபட்டு வந்தார். இதனையே தினசரி வாடிக்கையாக்கினார். இதனைக் கண்டோர் ஊர் பெரியோரிடம் முறையிட ஊர் பெரியோர் விசாரசருமனின் தந்தையிடம் முறையிட்டனர். விசாரசருமரின் தந்தை இனி தான் பார்த்துக் கொள்வதாகக் கூறினார், மறுநாள் அதிகாலை விசாரசருமர் ஆற்றங்கரைக்கு சென்று பூஜித்து பாலபிசேகம் செய்துக் கொண்டிருக்கும் போது அவரது தந்தையார் கண்டு விசாரசருமரின் முதுகில் ஓங்கி அடிவைத்தார். அடியின் வலி உணராமல் சிவபூஜையிலேயே விசாரசருமர் ஈடுபட்டிருந்தார் அதிக கோபமுற்ற தந்தையார் பால் குடங்களை <உதைத்துத் தள்ளினார். இதன்பின்னே சுயநினைவு வரப்பெற்ற விசாரசருமர் தந்தையென்னும் பாராமல் அங்கிருந்த ஒரு கொம்பை எடுத்தார். அது மழுவாக மாறியது. உடன் தந்தையாரின் காலை வெட்டினார். <உடனே தம்பதி சமேதராய் சிவபெருமான் அங்கு காட்சிக்கொடுத்தார். பின் என்னுடைய தொண்டர்கள் அனைவருக்கும் உன்னைத் தலைவாக்கினோம் மேலும் என்னுடைய அமுதம், மலர்கள், பரிவட்டம் என அனைத்தும் உனக்கே தந்தோம் என்றபடியே தனது சடாமுடியில் இருந்த கொன்றை மாலையை விசாரசருமருக்கு சூட்டி அவருக்கு சண்டேச பதவியை அளித்தார். விசாரசருமருக்கு சண்டேச பதவியை அனுகிரகித்ததால் சிவபெருமானுக்கு "சண்டேச அனுக்கிரக மூர்த்தி என்றப் பெயர் ஏற்பட்டது.

கும்பகோணம் சேய்ஞலூர் ரோட்டைத் தாண்டி அமைந்துள்ள ஊர் "திருவாய்ப்பாடி ஆகும். இவரது பெயர் பாலுகந்தமூர்த்தி, இறைவி பெயர் பெரியநாயகி என்பதாகும். சண்டேசப் பதவியை அளிக்கும் வல்லமை இவர் ஒருவருக்கே உண்டு. சண்டேஸ்வரனை வணங்கினால்தான் சிவ வழிபாடே முழுமையடையும். இவரை வணங்க மனம் ஒருமைப்படும். வில்வார்ச்சனையும் வெண்சாத நைவேத்தியமும் பிரதோஷம், சோமவாரங்களில் கொடுக்க நல்லறிவு, நல்லெண்ணம் வெளிவரும். மேலும் இம்மூர்த்தியை பஞ்சகவ்யம் கொண்டு வழிபட ஆன்மாவானது தூய்மையடையும்.



# 32. தட்சிணாமூர்த்தி



சிவபெருமானுடன் கையிலையில் உரையாடிக் கொண்டிருந்தார் பார்வதி தேவியார். அப்பொழுது சிவபெருமானிடம் ஐயனே தட்சனின் மகளானதால் தாட்சாயினி எனும் பெயர் எனக்கு ஏற்பட்டது. தங்களை அவமதித்த தட்சனின் இப்பெயரை வைத்திருப்பது எனக்குப் பிடிக்கவில்லை எனவே அப்பெயர் மாறும் வண்ணம் வரம் வேண்டுமெனக் கேட்க உடன் சிவபெருமானும் பார்வதி மலை மன்னன் குழந்தை வரம் வேண்டி தவமிருக்கிறான், அவனுக்கு நீ மகளாகச் செல். பின் நான் வந்து மணமுடிப்பேன் என்றுக் கூறி அனுப்பினார். அங்கே குழந்தை உருவில் வந்த பார்வதி தேவி வளரத் துவங்கினார். இதற்கிடையே நான்முகனின் நான்கு புதல்வர்களான சனகன், சனந்தனன், சனாதனன், சனத்குமாரன் என்ற நான்கு முனிவர்கள் வேதாகமத்தை ஆரம்பம் முதல் முடிவு வரை படித்திருந்தனர். இருப்பினும் அவர்களது மனம் அலைபாய்ந்துக் கொண்டிருந்தது. இதனை சிவபெருமானிடம் கூறி தங்களுக்கு வேதத்தின் உட்பொருளை உபதேசிக்குமாறு



வேண்டினார். உடன் சம்மதித்த சிவபெருமான் நந்திதேவரிடம் சென்று மன்மதனைத் தவிர வேறு யார் வந்தாலும் உள்ளே விட வேண்டாம் என்றுக் கட்டளையிட்டு வந்து சனகாதியர்க்கு பதி, பசு, பாசம் இவற்றையெல்லாம் விளக்கி விரிவாகக் கூறினார். உடன் அவர்கள் மேலும் மனம் ஒடுங்கும்படி ஞான உபதேசம் செய்யச் சொன்னார்கள். உடனே சிவபெருமான் இதைக் கேட்டவுடன் மெல்லிய புன்னகைப் புரிந்து "அப்பொருள் இவ்வாறிருக்கும் என்றுக் கூறினார். பின்னர் மேலும் புரியவைக்க தன்னையே ஒரு முனிவன் போலாக்கி தியானத்தில் ஒரு கணநேரம் இருந்தார். அதே நிலையிலேயே அந்த நால்வரும் இருந்தனர். அப்போது மன்மதன் உள்ளே வந்து சிவபெருமான் மேல் பாணம் விட, கோபமுற்ற சிவபெருமான் அவனை நெற்றிக் கண்ணாலே எரித்தார். சிவபெருமான் அந்நிலை நீங்கி முனிவர்களை வாழ்த்தி அனுப்பினார். இறைவன் தட்சிணாமூர்த்தியாக இருந்து சனகாதி முனிவர்களுக்கு உபதேசித்தால் அவரது பெயர் "தட்சிணாமூர்த்தி ஆயிற்று. இவரை தரிசிக்க செல்லவேண்டிய தலம் "ஆலங்குடி யாகும், குடந்தை-நீடாமங்கலம் வழியாக இவ்வூர் உள்ளது. இறைவன் காசியாரணியர். இறைவி <உமையம்மையாவார். இங்கு நடைபெறும் குருபெயர்ச்சி விசேசமாகும். சித்ரா பௌர்ணமி, தைப்பூசம், பங்குனி <உத்திரம் போன்ற நாட்களில் இருபத்தி நான்கு நெய் விளக்கு ஏற்ற திருமணத்தடை நீங்கும், குழந்தை பேறு கிடைக்கும். வெண்தாமரை அர்ச்சனையுமும் தயிரன்ன நைவேத்தியமும் வியாழக்கிழமைகளில் கொடுக்க நினைவாற்றல் பெருகும்.

இந்த தட்சிணாமூர்த்தி முன் நீர் ஆரத்தி எடுத்து தீபம் ஏற்ற தடைபெற்ற திருமணம் நடைபெறும், புத்திரப் பேறு கிடைக்கும்.



# 33. யோக தட்சிணாமூர்த்தி




சிவபெருமான் திருக்கைலையில் தட்சிணாமூர்த்தியாக வீற்றிருக்கும் போது நான்முகனின் நான்கு மகன்களான சனகாதி முனிவர்களுக்கு பதி, பசு, பாசம் பற்றி உபதேசித்துக் கொண்டே வந்தார். அப்போது அவர்கள், இறைவா ! எங்கள் மனம் விரிவடைந்துள்ளது, ஆகையால் அவை ஒடுங்கும் யோக மார்க்கங்களை எங்களுக்கு உரைக்கவும் என்று விண்ணப்பித்தனர். உடனே அவர்களின் வேண்டுகோளுக்கு செவிசாய்த்த சிவபெருமான் கீழ்கண்டவாறு யோக மார்கங்களை கூறலானார். அவையாவன யோகம் என்பது ஜீவாத்மாவும், பரமாத்மாவும் கலப்பது. அது எப்படியெனில் வெளிக்காரணத்தை அந்தக்காரணத்தில் அடக்கி மனதை ஆன்மாவில் அடக்கி தூய்மையான ஆன்மாவை பரத்தில் சேர்த்தலாகும். அத்துடன் யோகப்பயிற்சி இருந்தால் மட்டுமே பரம்பொருளை தரிசிக்க முடியும்.

தசவாயுக்களான பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன்,



கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் எனும் தசவாயுக்களை அடக்குவது யோகமாகாது. யோகத்தை எட்டாகப் பிரிக்கலாம் அவை இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவாம் இவற்றில் இயமம் என்பது கொல்லாமை, பிறர்பொருளுக்கு ஆசைப்படாமை, நியமம் என்பது தவநிலை, ஆதனம் என்பது சுவந்திகம், கோமுகம், பதுமம், வீரம், பத்திரம், முத்தம், மயூரம், சுகம் என எட்டாகும், பிராணாயாமம், மூச்சுப்பயிற்சி, பிரத்தியாகாரம் நம்மைப் பார்ப்பது, தாரணை என்பது ஏதாவது, ஒரு உடலுறுப்பின் மீது சிந்தையை வைப்பது, தியானம் என்பது மனத்தை அடக்குதல், சமாதி என்பது மேற்சொன்னவற்றுடன் பொறுத்தி ஆதார நிலையங்கள் ஆ<றுடன், நான்கு சக்கரங்களை வியாபித்து அனைத்துமாகிய, சகலமான பரம்பொருளை தியானித்தலே சிவயோகம் என்றழைக்கப்படும் சமாதி நிலையாகும். இவ்வாறு யோகம் பற்றியும் அதன் உட்கருத்துப்பற்றியும் சிவபெருமான் சனகாதி முனிவர்களுக்கு உரைத்ததுடன் தாமே சிறிது நேரம் அந்நிலையில் இருந்து காட்டினார். இதனால் விரிவடைந்த மனம் ஒடுங்கியது. உ<டனே சனகாதி முனிவர்கள் சிவபெருமான் பாதத்தைத் தொட்டு வணங்கி விடைபெற்றனர். சனகாதி முனிவர்களுக்குப் புரியும்படி யோக முறையை கற்பித்து அத்தகைய யோக நிலையில் இருந்துக் காட்டிய உருவமே "யோக தட்சிணாமூர்த்தி யாகும்.

மயிலாடுதுறை அருகே அமைந்துள்ளது குறுக்கை. இங்கு யோக தட்சிணாமூர்த்தி ஆலயம் உள்ளது. இவர் கிரகங்களுக்கே அதிபதியாவார். இவர் யோக நிலையில் காணப்படுவதால் பெரும்பலம் பொருந்தியவர். வியாழன்தோறும் விரதமிருந்து இவரை வணங்க பிறவித் துன்பம் தீரும். வெண்தாமரை அர்ச்சனையும், கொண்டைக்கடலை (அ) தயிரன்ன நைவேத்தியமும் வியாழன் தோறும் கொடுக்க கட்டுப்பாடாக, ஒழுங்காக வாழ்க்கை அமையும். இங்குள்ள மூர்த்திக்கு பச்சைகற்பூர நீரால் அபிசேகம் செய்ய யோக சித்திகள் வாய்க்கப்பெறும்.



# 34. வீணா தட்சிணாமூர்த்தி



திருக்கையிலையில் பக்தர்களுக்கும், தேவர்களுக்கும் அருள் செய்ய தட்சிணாமூர்த்தியாக எழுந்தருளினார். அப்போது நாரதர். சுக்ரமுனிவர்களின் இசைஞானத்தை உணரவும், சாமவேதத்தை இசையுடன் வீணையில் ஏற்றிப்பாடவும் தங்களுக்கு அருள்புரிய வேண்டினார். உடனே அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி வீணையையும், இசைக்கலையைப் பற்றியும் கூறத் தொடங்கினார். அப்போது எந்த வகையான மரத்திலேயே வீணை செய்ய வேண்டும். அதனால் என்னப் பலன், என்றும் எம்மரத்தில் வீணை செய்யக்கூடாது அதனால் என்ன இசைக்குற்றம் ஏற்படுமென்னும் விளக்கிக்கொண்டு வந்தார். அப்போது கொன்றை, கருங்காலி மரங்களால் வீணை செய்ய வேண்டும் என்றார். அவற்றில் இசை இலக்கணம் சம்பந்தப்பட்ட நால்வகை வீணைகளையும் செய்யலாம் என்றார். அந்த நால்வகை வீணையாவன பேரியாழ், மகரயாழ்,



சகோடயாழ், செங்கோட்டியாழ் என்பனவாகும். இதில் பேரியாழுக்கு 21 நரம்பும், மகரயாழுக்கு 17 நரம்பும், சகோடயாழுக்கு 16 நரம்பும், செங்கோட்டியாழுக்கு 7 நரம்பும் இருக்கவேண்டும். மேலும் இலக்கணப்படி யாழிற்கு பண்ணல், பரிவட்டனை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்ற எட்டு வகை இலக்கணப்படியே இசையெழுப்ப வேண்டும். முக்கியமான வீணையுடன் பாடும்போது <உடல் குற்றம் இல்லாமலும், பாடலில் குற்றம் இல்லாமலும் இசையில் குற்றம் இல்லாமலும் ஒரு பாடல் அமைய வேண்டும் என்பது மரபு. இவ்வாறாக வீணையைப் பற்றியும், இசையைப் பற்றியும், அதன் பாடல்களைப் பற்றியும், அதன் உட்பிரிவுகளைப் பற்றியும் எடுத்துரைத்து விரிவாகக் கூறி அந்த வீணையை தோளின் மீது வைத்து இசையெழுப்பி பாடிக்காட்டினார். இதனைக்கண்ட, கேட்ட அனைவரும் ஆனந்தப்பட்டனர். தங்கள் கண்களையே நம்பமுடியாமல் ஆச்சர்யப்பட்டனர். இவ்வாறு நாரதர், சுகர் பொருட்டு வீணையுடன் காட்சிதருவதால் அவர்க்கு வீணா தட்சிணாமூர்த்தி என்றப் பெயர் உண்டானது.

திருச்சிக்கருகேயுள்ள லால்குடியில் அமைந்துள்ள சிவன் கோயிலில் வீணா தட்சிணாமூர்த்தி இருக்கின்றார். இவரை வணங்கினால் உயர்பதவி, கல்வியில் முன்னேற்றம், நினைத்த படிப்பு படிக்கும் அமைப்பைக் கொடுப்பார். வியாழக்கிழமைகளில் இவர்க்கு சந்தனக் காப்பிட நினைத்தக் காரியம் கைகூடும். வெண்தாமரை அர்ச்சனையும், தயிரன்ன நைவேத்தியமும் வியாழக்கிழமைகளில் கொடுக்க மனம் ஒருமுகப்படும். மேலும் இவர்க்கு தேனாபிசேகம் செய்தால் தேன் போன்ற இனிமையான குரல்வளம் கிடைக்கும்.



# 35. காலந்தக மூர்த்தி



மிருகண்டு முனிவர் என்பவர் மருத்துவதி என்னும் பெண்ணைத் திருமணம் செய்தார். ஆண்டுகள் பலவாகியும் குழந்தையில்லாத காரணத்தால் மிருகண்டு காசி சென்று குழந்தை வேண்டி தவமியற்றத் துவங்கினார். தவத்திற்கு மெச்சி சிவபெருமான் காட்சிக் கொடுத்து என்ன வேண்டும் என்றுக் கேட்டார். குழந்தை வேண்டுமென்றதும் முனிவரே தீயகுணம், உடல் நோய், ஐம்பொறி ஊனம், அறிவின்மை இவற்றுடன் நூறாண்டு வாழும் பிள்ளை வேண்டுமா? அல்லது அழகு, அறிவு, நோயின்மை, எம்மருள் கொண்ட பதினாறு வயது வரை ஆயுள் கொண்ட பிள்ளை வேண்டுமா என கேட்க முனிவரோ பதினாறு வயது வரை ஆயுள் கொண்ட பிள்ளையே வேண்டுமென்றார். உடன் வரம் கொடுத்து மறைந்தார். பின் சிறிது நாளில் ஒரு நல்ல சுபமுகூர்த்த தினத்தில் மருத்துவதி அழகான பிள்ளையைப் பெற்றெடுத்தார். தேவர்கள் பூமாரி பொழிந்து, தேவதுந்துபி



இசைத்து வரவேற்றனர். நான்முகன் அக்குழந்தைக்கு மார்க்கண்டேயன் என்று பெயரிட்டார்.

மார்க்கண்டேயன் நாளொறு மேனியும் பொழுதொரு வண்ணமாக வளரத்துவங்கினான். தான் வளர வளர பெற்றோர் ஆனந்தப்படாமல் வருத்தப்பட்டுக் கொண்டுள்ளார்களே என்னக்காரணம் என்றுக் கேட்க. பெற்றோர்களும் அவனது வரத்தைப் பற்றிக் கூறினர். மார்க்கண்டேயன் பெற்றோரை சமாதனம் செய்து தாம் பூரண ஆயுளுடன் இருக்க சிவபெருமானை நோக்கி தவமிருந்து வெற்றியுடன் திரும்புவதாகக்க கூறி காசி சென்றார். அங்கு மணிகர்ணிகையருகே ஒரு சிவலிங்கத்தைப் பூஜித்து வந்தார். சிவபெருமான் அவரது பூஜைக்கு மகிழ்ந்து எமபயம் நீங்குக என்று வரமளித்தார். பின் ஊர் திரும்பினார். அங்கும் வழிபாட்டைத் தொடர்ந்தார். இவ்வாறிருக்கும் போது அவனது ஆயுள் முடிவடையும் சமயத்தில் எமதூதன் அழைத்தான். பூஜை பலனால் எமதூதனால் அருகே நெருங்கக்கூட முடியவில்லை. பின்னர் சித்ரகுப்தனும், எமனது மந்திரியான காலனையும் அனுப்பினான். ஆனால் மார்க்கண்டேயனை அசைக்க கூட முடியவில்லை முடிவாக எமனே வர மார்க்கண்டேயன் சிவலிங்கத்தை தழுவிக் கொண்டான். உடன் சிவபெருமான் தோன்றி எமனை இடக்காலால் எட்டி உதைத்தார். இதனால் எமன் இறந்தான். உடன் பூமியில் மரணம் நிகழாததால் பூமியின் எடைக் கூடிக் கொண்டே சென்றது. பாரம் தாங்காத பூமாதேவி சிவபெருமானை வேண்டினார். உடன் எமன் உயிர்த்தெழுந்தான் மிருகண்டு மகனான மார்க்கண்டேயனுக்கு நித்ய சிரஞ்சீவியார்க்கி என்றும் பதினாறு என்று வரமளித்தார். மார்க்கண்டேயனுக்காக சிவபெருமான் எமனை உதைத்த கோலமே காலந்தக மூர்த்தி யாகும். அவரை வணங்க நாம் சொல்ல வேண்டிய தலம் திருக்கடவூர் ஆகும். இத்தலம் மாயவரம் அருகேயுள்ளது. எமபயம் நீங்க இத்தல இறைவனை வணங்க வேண்டும். ரிஷிகள், முனிவர்கள், சித்தர்கள் என அனைவரும் எமபயம் நீங்க இங்குள்ள இறைவனை தினமும் வழிபடுவதாக ஐதீகம். இங்கு அறுபது வயதைக் கடந்தோர் சஷ்டியப்த பூர்த்தி விழாவினை இங்கு வந்துக் கொண்டாடுகின்றனர். செந்தாமரை மலர் அர்ச்சனையும், தேங்காய், மஞ்சள், பூ நைவேத்தியமும் வெள்ளிக்கிழமைகளில் கொடுக்க ஆயுள் அதிகரிக்கும். எமபயம் நீங்கும்.



# 36. காமதகன மூர்த்தி



பார்வதிதேவியார் பர்வத மன்னனின் மகளாகி இமயமலையில் சிவபெருமானையே கணவனாக எண்ணி தவத்தில் இருந்தார். இங்கு சிவபெருமான் சனகாதி முனிவர்களுக்கு யோக முறையை விளக்கி அந்நிலையிலேயே இருந்தார். அவரால் <உலகிலுள்ள அனைத்து உயிரினங்களுமே யோகநிலையில் இருந்தன. இதனால் உலக இயக்கம் நின்றது, நான்முகனின் படைப்புத் தொழி<லும் நின்றது. இதனால் கலக்கமுற்ற தேவர்கள் சிவபெருமானை பார்க்க அனுமதிக்குமாறு நந்திதேவனை வேண்டினர். நந்திதேவன் மறுத்திடவே அனைவரும் சிவதியானத்தில் ஈடுபட்டனர். உடன் இந்திரன் கனவில் சிவபெருமான் தோன்றி பார்வதியை திருமணம் செய்வோம். எங்கள் மகனால் இத்துயரம் தீரும் என்றுரைத்தார். பின்னர் இந்திரன் அனைத்து தேவர்குழாமுடன் சென்று நான்முகனிடம் ஆலோசனை கேட்க நான்முகனோ மன்மதன் சிவபெருமான் மீது பாணம் விட்டால் அவரது யோகம் கலையும். உலகம்



முன்போலவே இயங்கும் என்று ஆலோசனைக் கூறினார். இதனால் மன்மதனும் வந்தார். பாணம் விட மறுத்தார். இறுதியில் <உலக நன்மைக்காக அந்தக்காரியத்திற்கு ஒத்துக் கொண்டார். யோக நிலையிலுள்ள சிவபெருமானிடம் சென்றார். அவரை மேற்கு வாசல் வழியே நந்திதேவர் உள்ளனுப்பினார் சென்றவுடன் அவர் மீது பாணம் விட, சிவபெருமானின் யோகம் கலைந்தது. அதனால் கோபப்பட்ட அவர் நெற்றிக்கண்ணால் மன்மதனை எரித்தார். பின்னர் பர்வத மலைக்கு சென்று பார்வதிதேவியை மணம் புரிந்தார். இந்த நிலையில் ரதி தன் கணவனைத் திரும்ப தரும்படி வேண்டினார். அதன்படி மன்மதன் மீண்டும் <உயிர்த் தெழுந்தார். உடனே ஒரு நிபந்தனை விதித்தார். ரதியின் கண்களுக்கு உருவமாகவும், மற்றோர்க்கு அரூபமாகவும் இருக்கும்படி நிர்பந்தித்தார். மன்மதனை எரித்ததால் சிவபெருமானுக்கு காம தகன மூர்த்தி என்ற பெயர் ஏற்பட்டது, இவரை மாயமவரம் அருகே உள்ள குறுக்கையில் காணலாம். இவரை வணங்கினால் அளவுக்கதிகமான காம உணர்வு அடங்கும். சிவத்தில் ஐக்கியமாக விரும்பும் ஆன்மாக்கள் இவரை வணங்க, காமம் தலைதூக்காது. இவர்க்கு தேனாபிசேகமும், சர்க்கரை பொங்கல் நைவேத்தியமும் ஞாயிற்றுக்கிழமைகளில் கொடுக்க உடன் பிறந்தோருடைய அன்பு மேலோங்கும். குடும்ப ஒற்றுமை ஏற்படும்.



# 37. இலகுளேஸ்வர மூர்த்தி



நம்முடைய பூமியைப் போலவே கோடிக்கணக்கான அண்டங்கள் அளவிட முடியாத பரந்து விரிந்துள்ள வானில் உள்ளன. இவை அறிவியல் பூர்வமான <உண்மையாகும். இதையே ஆன்மிகத்தோடு இணைத்து பார்ப்போம். இவ்வுலகம் எட்டுக்கொண்டது திரசரேணு, திரிசரேணு எட்டுக் கொண்டது லீகை, லீகை எட்டுக் கொண்டது யவை, யவை குறுக்குவாட்டில் எட்டுக் கொண்டது மானங்குலம் மானங்குலம் இருபத்தி நான்கு கொண்டது முழம், முழம் நான்கைக் கொண்டது வில், வில் இரண்டுடையது தண்டம், தண்டம் இரண்டாயிரம் கொண்டது குரோசம், குரோசம் இரண்டுடையது கெவியூதி, அக்குரோசம் நான்கைக் கொண்டது யோசனை, யோசனை நூறு கோடி கொண்டது நிலத்தின் தத்துவத்தின் விரிவாகும்.பஞ்சபூதங்களைக் கொண்ட ஆயிரமாயிரம் பேரண்டங்கள் <உலகில் உள்ளன. பொதுவாக பத்து (புவனங்கள்) உலகங்கள் மேலேயும், பத்து உலகங்கள் கீழேயும் இருக்கும் அதுத்தவிர ஈசானத்தில் பத்தும், வடக்கு, வாயுமூலை, மேற்கு,



நிருதிதிக்கிலும், தெற்கிலும், அக்னிமூலையிலும், கிழக்கி<லும் முறையே பத்து பத்து உலகங்கள் இருக்கும். இவைத்தவிர எண்ணிலடங்கா உலகங்கள் இருக்கின்றன. அந்த உலகங்கள் ஆயிரக்கணக்கான பேரண்டத்தில் பரவியுள்ளன. அதில் நடுநாயகமான சிவபெருமான் வீற்றிருக்கிறார். அவரது திருமேனியைக் காணக் கண்கள் ஒளியிழக்கின்றன. அவ்வாறான ஒளிவெள்ளத்தின் நடுவே அவர் வீற்றிருக்கும் கோயிலின் விரிவு அநேக கோடியமாகும், அந்தத் திருமேனியின் அளவு அநேக கோடியாகும். அவர் வலப்புறமாக மழுவும், சூலமும், இடப்புறமாக கலசமும் கொண்டு இவ்வுலகிலுள்ள <உயிரினங்களின் மும்மலங்களைப் போக்கும் நல் ஞானாசிரியனாக அவர் வீற்றிருக்கிறார். இத்தகைய பெருமையுடன் ஒவ்வொரு அண்டத்தி<லும் ஒருவராக எழுந்தருளி அங்குள்ள <உயிரினங்களின் வாழ்க்கைக்குத் தேவையானவற்றைக் கொடுத்து அருளாட்சி செய்யக்கூடிய மூர்த்தியே "இலகுளேஸ்வர மூர்த்தி யாகும். இவரை தாராசுரம் அருகேயுள்ள சத்திமுற்றம் என்ற ஊரில் காணலாம். இறைவன் பெயர் சிவக்கொழுந்தீசர், இறைவி பெயர் பெரிய நாயகி ஆவார். இங்கமைந்துள்ள சூலதீர்த்தத்தில் நீராடி இறைவனுக்கு அர்ச்சனை செய்ய திருமணத்தடை விலகும். இவர்க்கு மகாவில் வார்ச்சனையும், முக்கனிப்படையல் நைவேத்தியமும் புதன்கிழமைகளில் செய்ய மும்மலம் மறைந்தோடும் பதவியை தக்க வைக்க முடியும்.





# 38. பைரவ மூர்த்தி




பார்க்கும் யாவரும் அச்சப்படும் "அந்தகன் என்ற பெயருடைய அசுரனொருவன் சிவபெருமானை நினைத்து, பஞ்சாக்கினி மத்தியில் தவம் செய்தான். அத்தவத்தில் மகிழ்ந்த சிவபெருமான் பார்வதி தேவியுடன் இடப வாகனத்தில் வந்து என்னவேண்டுமென்றுக் கேட்டார். நான்முகன், விஷ்ணு இவர்களை விட பலமும், யாவரும் அழிக்கமுடியாத ஆற்றலும் வேண்டுமென்றான். உடனே தந்து மறைந்தார் சிவபெருமான். சிவபெருமான் கொடுத்த வரத்தினால், பெற்ற ஆங்காரத்தினால் இந்திரன், விஷ்ணு, நான்முகன் என அனைவரிடமும் சண்டைப் போட்டான். அவனது சண்டைக்கு முன் அனைவரும் தோல்வியுற்றனர். அவனை மிஞ்சுபவர்கள் யாருமில்லை எனவே அவனிடமே சேர்ந்து விடுவதென முடிவெடுத்து விஷ்ணு முன்செல்ல தேவகணங்ளும் பின்சென்றனர். அனைவரும் அந்தகனிடம் சரணடைந்தனர். இதனால் அந்தகன் அனைவரையும்



பெண்களைப்போல் உடை, நடை, பாவனைகளில் இருக்கும்படி கட்டளையிட்டான். அதன்படியே அனைவரும் பெண்களாயினர். பெண்களானபின்பும் அவனது கொடுமைத் தொடர அனைவரும் அக்கோலத்துடன் சிவபெருமானை வழிபட்டனர். சிவபெருமான் உடன் தோன்றி அவர்களை பார்வதியின் அந்தப்புரத்துப் பெண்களுடன் இருக்கச் செய்தார். இருப்பினும் விடாமல் தொல்லைக் கொடுத்து வந்தான் அசுரன். பொறுத்துப்பார்த்த தேவகணத்தினர் கையிலை அடைந்து சிவபெருமானிடம் முறையிட்டனர். சிவபெருமான் தன்னால் தோற்றுவிக்கப்பட்ட பைரவர்க்கு ஆணையிட்டு அந்தகனை அழிக்க உத்தரவிட்டார். பைரவர்க்கும், அந்தகனுக்கும் இடையே அதிபயங்கரப் போர் நிலவியது. ஆனால் அசுரனின் சேனைகள் சுக்கிராச்சாரியால் உயிர் பெற்று வந்தன. <உடனே சிவபெருமான் சுக்கிரனை விழுங்கினார். அடுத்த நொடி அசுரசேனைகள் அழிந்தன. பைரவர் தனது சூலத்தால் அந்தகனை குத்திச் சிவபெருமானை அடைந்தார். இதனால் மனம் மாறிய அந்தகன் தனது அகங்காரமெல்லாம் மறைய சிவபெருமானிடம் தன்னை பூதகணங்களுக்கு தலைவனாக்க வேண்டினார். அவனது ஆசையை நிறைவேற்றினார். சிவபெருமானின் வயிற்றிலிருந்த சுக்கிரன் அவரது சுக்கிலத்துடன் வெளிவந்தான். பின்னர் தேவர்கள் தொல்லையின்றி நிம்மதியுடன் வாழ்ந்திருந்தனர். அந்தகனின் அகந்தையை அழிக்க சிவபெருமான் எடுத்த வடிவமே "பைரவமூர்த்தி யாகும்.

(சிவபெருமானைப் போல் ஐந்துதலையுடன் இருந்த நான்முகனின் அகந்தையை அடக்க சிவபெருமான் பைரவரை தோற்றுவித்து நான்முகனின் ஐந்தாவது தலையை கிள்ளியெடுத்தார் என்றும் புராணங்கள் கூறுகின்றன)

காசி முதல் பதினாறு பைரவர்

தேய்பிறை அஷ்டமியில் செவ்வரளியால் சகஸ்ரநாமம் தொடர்ந்து ஆறு தேய்பிறைகள் கூற புத்திரபாக்கியம் கிடைக்கும். பன்னிரெண்டு தேய்பிறை அஷ்டமியன்று பைரவர் சகஸ்ரநாமம் கூறி ஜென்ம நட்சத்திரர் அர்ச்சித்து பூந்தியை நைவேத்தியமாகக் கொடுக்க சர்க்கரை நோய் நம் கட்டுப்பாட்டிற்க்கு வரும். தேனாபிசேகம் செய்து நெய்விளக்கிட்டு உளுந்தவடை சாற்றி ஜென்ம நட்சத்திரத்தில் வழிபட வியாபாரம் செழிக்கும், மேலும் நாயுருவி இலை அர்ச்சனையும், சுத்த அன்னம் வெண்ணிற பசுவின் பால் கொண்டு சனிதோறும் நைவேத்தியம் கொடுக்க யமபயம் நீங்கி சுகம் உண்டாகும்.



# 39. ஆபத்தோத்தாரண மூர்த்தி




ஆபத்திலிருந்து காக்கும் மூர்த்தி

அனைத்துவித மங்களமான ஒளிமயமான, ஜோதி மயமான சிவனே உலகில் சஞ்சரிக்கக்கூடிய அனைத்து உயிர்களுக்கும் ஏற்படும் துன்பத்தின் போக்கக்கூடியவர். அவரையின்றி வேறொருவர் நமக்குத் துணை கிடையாது. அத்தகைய ஈடில்லா சிறப்பினைப் பெற்ற சிவபெருமானைச் சுற்றிலும் எண்ணற்ற தேவகணங்கள், பூதகணங்கள், நடனமங்கையர், நான்முகன், இந்திரன், திருமால், முனிவர்கள், ரிஷிகள், சித்தர்கள், அசுரர், கிம்புருடர், கின்னரர், யமன், பதினென் கணங்கள், முருகன், வினாயகன், தேவியர், பார்வதி, காளி, கௌமாரி, இந்திராணி, சாமுண்டீஸ்வரி, அபிராமி, மகேஸ்வரி, சப்தகன்னியர், நாயன்மார்கள், ஆழ்வார்கள், ஆயுதங்கள், சப்தமாதர்கள், நாரதர், சந்திர, சூரிய, கிரகங்கள், முப்பத்து முக்கோடி தேவர்கள், சப்தரிஷிகள், நட்சத்திக் கூட்டங்கள், மனிதர், நரகர், நாகர் என அனைத்து



வகையான ஜீவராசிகளும் அவரைச் சுற்றிலும் நின்றபடி அனைவருக்கும் வேண்டிய வரங்களையும், வேண்டுவனவற்றையும் கொடுப்பார். அச்சமயங்களில் அவர்களது எண்ணப்படி சாதாரண மானிடர் போல் சட்டையணிந்து இருத்திருக்கரத்தினால் தண்டமும், கபாலமும் ஏந்தியபடி அவர் வீற்றிருப்பார். இவ்வாறென்றுக் கூற முடியாதபடி அந்தந்த சமயத்திற்குத் தகுந்தபடி அனைவரின் குறைகளையும் கேட்டறிந்து, அவர்களின் துன்பங்களில் இருந்தும், ஆபத்திலிருந்தும் அவர்களைக் காத்து ரட்சிப்பார். ஆகவே அவரது அற்புதங்களும் அவதாரங்களும், மூர்த்தங்களும் இன்னக் காரணங்களுக்கெனக் கூறமுடியாது. துன்பம் அடைந்தோரையும், ஆபத்திலிருப்போரையும் காத்து ரட்சிக்கும் திருக்கோலமே ஆபத்தோத்தாரண மூர்த்தி யாகும். சீர்காழியில் கோயில் கொண்டுள்ள இறைவன் பெயர் பிரம்மபுரீஸ்வரர் என்றும், இறைவி பெயர் திருநீலைநாயகி எனவும் அழைக்கப்படுகின்றார். ஆபத்து சமயங்களில் இவரை வேண்ட, இவர் உதவுவார் என்பது ஐதீகம். அவரது திருவுருவங்கள் பலவற்றிற்கு இத்தன்மை இல்லையென்றாலும் அந்தந்த சூழலுக்கு கேற்றாற்போல் உதவிக்கிடைக்கும். இவர்க்கு எருக்கு, தும்பைப்பூ, முல்லை அர்ச்சனையும், புனுகு அபிசேகமும் வெள்ளியிரவு 12 மணியளவில் செய்தோமானால் வேண்டிய பலன் உடனே கிடைக்கும் என்பது உறுதி.



# 40. வடுக மூர்த்தி




சிவார்ச்சனையால் பலனடைந்த துந்துபி என்போனின் மகனான முண்டாசுரன். இவன் இளமையிலேயே சிவபெருமானை நோக்கி, ஊண், உறக்கமின்றி, வெயில், மழை, குளிரெனப் பாராமல், ஐம்புலனையும் அடக்கி சிவபெருமானை மட்டுமே நிந்தையில் கொண்டு தவம் செய்தான். அவனது தவத்தில் மெச்சிய சிவபெருமான் நான்முகன், திருமால் இருபுறம் வரவும், தும்புருநாதர் இசைபாடவும், பார்வதியுடன் இடப வாகனத்தில் எழுந்தருளினார் முண்டாசுரன் மகிழ்ந்தான், பின் யாராலும் அழிக்க வொண்ணாத வரம் கேட்டான். கேட்டபடி கொடுத்து மறைந்தார். அவ்வரத்தினால் தேவர்கள், சந்திர, சூரிய, குபேரன் என அனைவரையும் துன்புறுத்தினான். பின்னர் குபேர சொத்துக்கள் அத்தனையையும் கொண்டுசென்றான். அவனுடன் போர்புரிந்து தோற்றனர். எனவே நான்முகனை சரணடைந்தனர். நான்முகன் முண்டாசுரனை அழிக்கப் புறப்பட்டார். இரு படைக்கும் கடும் போர் நடைபெற்றது. நான்முகனால் அசுரனை வெற்றிக் கொள்ள



முடியாத சூழ்நிலையில் நான்முகன் சிவபெருமானை வணங்கி ஐயனே ! எனது துயர் தீர உதவ வேண்டும். அசுரனை அழிக்க வேண்டும் என்று மனமுருக வேண்டினார். அவ்விண்ணப்பத்தைக் கேட்ட சிவபெருமான் தன்னிடமிருந்து தோற்றுவிக்கப்பட்ட வடுக மூர்த்தியை அனுப்பி முண்டாசுரனை வதம் செய்யச் சொன்னார்.

வடுகமூர்த்தியும் அவ்விடம் சென்று முண்டாசுரனை ஒரு நொடியில் வதம் செய்தார். இதனைக் கண்ட நான்முகன் மனம் மகிழ்ந்தார். தேவர்கள் பூமாரிப் பொழிந்து வடுகமூர்த்தியை வாழ்த்தினார். பின்னர் வடுகமூர்த்திஅனைவரையும் விடுவித்து அவரவர் இடத்தில் அமர்த்தி விட்டு சிவபெருமானிடம் சென்று ஐக்கியமானார். நான்முகனின் வேண்டுகோளிற்கேற்ப சிவபெருமான் முண்டாசுரனை அழிக்க எடுத்த முர்த்தமே வடுக மூர்த்தி யாகும். வடுகரை தரிசிக்க நாம் செல்லவேண்டிய தலம் பாண்டிக்கருகேயுள்ள வடுகூர் ஆகும். இங்குள்ள இறைவன் பெயர் வடுகநாதன், வடுகூர்நாதன் என்பதாகும். இறைவி பெயர் திரிபுரசுந்தரியாகும். (திருவாண்டார் கோயில் எனவும் இத்தலத்தை வணங்குவர்) இங்கு வாமதேவ தீர்த்தமும், வன்னிமரம் தலமரமாகவும் <உள்ளது. கார்த்திகை அஷ்டமியில் இங்கு பைரவர்க்கு விசேஷமாகும். ஏழரை சனியின் துன்பம் அகல சனிதோறும் வடுகர் முன்பமர்ந்து சகஸ்ரநாமம் சொல்ல வேண்டும். நாள்பட்ட வழக்குகள் வெற்றிபெற பூஜையுடன் தேனாபிசேகம் செய்து 9 முறை அர்ச்சனை செய்ய வேண்டும். ஞாயிறன்ணு வடுகருக்கு விபூதியபிசேகம் செய்யத் திருமணம் விரைவில் நடைபெறும். மேலும் வெண்தாமரை அர்ச்சனையும், சர்க்கரை பொங்கல் நைவேத்தியமும், புதன் தோறும் கொடுக்க நீள் ஆயுள் கிடைக்கும். ஆரோக்கியம் நிலவும்.



# <u>41. சேத்திரபால மூர்த்தி</u>




ஆரம்பம் முடிவு இல்லாதவனும், ஆதியும் அந்தமும் கொண்டவனாகிய சிவபெருமானே பலகோடி உயிரினங்களைப் படைக்கின்ற பிரம்மனாகவும், உருத்திரனாகக் கொன்றும், மகேஸ்வரராக மறைந்தும், திருமாலாகி காத்தும், சதாசிவமூர்த்தமாகி அருள் செய்தும், இவ்வாறு மேற்கண்ட ஐந்தொழில்களையும் செய்து வருகிறார். அவர் அசைந்தால் மட்டுமே அசையும் உலகமனைத்தும் அவரது கட்டளையாகவே அனைத்துக் கோடி உயிரினங்களும், கோடிகோடியான அண்டங்களும் இயங்குகின்றது. அவரே அனைத்து மாசமுத்திரங்களையும் உருவாக்குபவர், முடிவில் அதனலேயே அழிப்பவர். தீவாந்திரங்களையும், ஈரேழு உலகத்தையும், ஆக்கவொண்ணா அண்டங்களையும் அவரே படைத்தார், படைக்கின்றார். அதுவொரு காலம். இந்த அண்டத்தினை ஒரு ஊழிக்காலமானது அலைகளால் மூடியது. அதில் மூழ்கியவை எட்டு பர்வத மலைகளையும்



மூழ்கடித்ததுடன் அனைத்து பர்வதங்களையும் அழிக்கும்படி பெரும் வெள்ளம் தோன்றியது. அவ்வழி வெள்ளத்தில் நவகிரகங்கள் சூரிய, சந்திர, தேவர்குழாம், மகாநாகங்கள், எட்டு திசை காவலர்கள், கற்பகத்தரு, வாழ்வன, பறப்பன, ஊர்வன, மிருகங்கள், தாவரங்கள் மனிதர்கள், இந்திரன் என அனைவரும் அழிந்தனர். உலகிலுள்ள அனைத்து உயிரினங்களும் அழிந்துப்போயின நீண்ட நாட்கள் இந்நிலையேக் காணப்பட்டது.

பின்னர் மான், மழு ஏந்தி பாம்பு, புலித்தோலாடை அணிந்து கொன்றை மலர் சூடி நீலகண்டமும், நெற்றிக் கண்ணை மறைத்து, பார்வதியுடன், ஆயர்க்கலைகளையும் அழைத்து கொண்டு ஒரு படகில் ஏறிய சிவபெருமான் <உலகை ஒளியால் நிரப்பி, இருளை இருட்டடிப்பு செய்தார். அழிவுக்கு காரணமான வருணன் அவர்களை வணங்கி தம்பதி சமேதரான இறைவனுக்கும், இறைவிக்கும் முத்து, பவளம் கொண்டு அர்ச்சித்து ஆசிவேண்டினார். சிவபெருமான் அருளாசி வழங்கினார். பின்னர் வெள்ளத்தை ஒரு நொடியில் துடைத்தெரிந்தார். பின்னர் மாண்டுவிட்ட அனைவரையும் எழுப்பி அவரவர் பணியில் அமர்த்தி அனைத்து உயிரினங்களையும் காத்தருளி ஈரேழு உலகத்திற்கும் நேர்ந்த துன்பத்தைக் கலைத்தார். அனைத்து உயிர்களுக்கும் ஊழிக்காலத்தில் ஏற்பட்ட துன்பத்தைப் போக்கி அங்கிருந்த உயிர்களை காத்ததால் அவருக்கு சேத்திரபால மூர்த்தி என்றப் பெயர் ஏற்பட்டது. இவர் சேத்திரபாலபுரத்தில் உ<ள்ளார். இவரை இடைவிடாது தரிசிக்க எதிரிகளிடமிருந்து விடுதலைக் கிடைக்கும். அரக்க குணமுடையவர்களிமிருந்து நம்மையும், நம் சொத்துக்களையும் காப்பவர் இவரே. இவரது படத்தை தொழில் நடைபெறும் இடம், வீடுகளில் வைத்து வழிபட தீயவர்கள் ஓடுவார்கள். இவர்க்கு நவமுக ருத்திராட்ச அர்ச்õனையும், இனிப்பு நைவேத்தியமும் சனிக்கிழமைகளில் கொடுக்க நம்முடைய தொழில் விருத்தியடையும்.



# 42. வீரபத்திர மூர்த்தி




தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் எப்பொழுதுமே இடைவிடாத போர் நடந்துக்கொண்டிருக்கும். இதனிடையே தேவர்கள் இந்திரனின் துணையுடன் அசுரர்களை போரில் தோற்கடித்து அவர்களின் உடலுறுப்புக்களைத் துண்டித்தனர். அசுரர்கள் தேவர்களை வெற்றி கொள்ள முடியாமல் தவித்தனர். அசுரர்கள் தங்கள் குருவான சுக்கிரனை ஆலோசித்தனர். அவரும் அசுரர்களுக்கு ஆலோசனைக் கூறித் தேற்றினார். முடிவில் சுக்கிரன் அசுரர்களில் வீரமார்த்தண்டன் என்பவனை அழைத்து நான்முகனை நினைத்து தவமியற்றச் சொன்னார். அதன்படியே வீரமார்த்தண்டன் கடுமையான தவமிருந்தான். தவத்தின் கடுமைத்தாங்காத நான்முகன் காட்சிக் கொடுத்தார். தவத்தினால் எலும்பும், தோலுமான வீரமார்த்தண்டனை பழையபடி ஆக்கி என்ன வேண்டுமெனக் கேட்டார். வீரமார்த்தண்டன் மூன்று உலகங்களையும் எனை வெல்ல யாருமில்லாதபடி நான்



அரசாள வேண்டுமென்ற வரத்தை வாங்கினான். அதன்படி தேவர்களை, தேவபெண்டிரை துன்புறுத்தினான். தேவர்களை செய்தக் கொடுமை உச்சக்கட்டம் அடையவே பொறுக்கமுடியாத தேவர்கள் சிவபெருமானிடம் தஞ்சமடைந்தனர். சிவபெருமான் அவர்களுக்கு ஆறுதல் கூறி வீரபத்திரரை அழைத்தார். வீரபத்திரரும் தேவர்களின் துயர்துடைக்கவும், சிவபெருமான் ஆணையாலும் வீரமார்த்தண்டனை எதிர்க்க முடிவெடுத்தார். முதலில் வீரமார்த்தண்டனின் படைபலங்களைக் கொன்றார். பின்னர் வீரமார்த்தண்டனை போரிற்கு அழைத்து போரிட்டார். மிகக் கடுமையான போராக அது அமைந்தது, வீரமார்த்தண்டனும் பலவிதமான மாயைகளைச் செய்து தப்பிக்கப் பார்த்தான். ஆனால் கடைசியில் ஒன்றும் ஆகவில்லை. வீரபத்திரர் வீரமார்த்தண்டனைக் கொன்றார். பின்னர் தேவர்களின் துயரினைத் துடைத்து இந்திரன், நான்முகன் என அனைவரையும் பதவியில் அமர்த்தி உலக உயிர்கள் அனைத்திற்கும் சுகவாழ்வளித்தார். வீரமார்த்தண்டனைக் கொன்று தேவர்களின் துயர்துடைக்க சிவபெருமான் கொண்ட கோலமே வீரபத்திர மூர்த்தி யாகும்.

காரைக்கால் அருகே அமைந்துள்ளது பெருந்துறையாகும். செவ்வாய்தோஷ நிவர்த்திக்கு வாழ்க்கை முறைக்கு வேண்டிய மனஉறுதியைத் தருபவர் இவரே, சித்திரை மாச செவ்வாய்கிழமைகளில் வீரபத்திர விரதம் மேற்கொள்ள வேண்டும். செந்நிறமலர் அர்ச்சனையும் புளிசாத நைவேத்தியமும் திங்கள் அல்லது வியாழக்கிழமைகளில் கொடுக்க எதிரி புத்தி அதிகரிப்பு, சகோதரபாசம், குடும்ப ஒற்றுமை நீடிக்கும்.



# 43. அகோர அத்திர மூர்த்தி




சத்ததந்து என்றும் மன்னன் சிவனருளால் பல வரங்களைப் பெற்று தனக்கு நிகர் எவருமில்லை என வாழ்த்து வந்தான், அவனது செருக்கால் தான் சிவபெருமானுக்கு செய்த அர்ச்சனையே அனைத்திற்கும் காரணமென நினைத்தான். தான் ஒரு வேள்வி செய்ய எண்ணி தேவர்களையும், முனிவர்களையும் மேரு மலையடிவராத்திற்கு அழைத்து வேள்வி செய்யத் துவங்கினான். பின்னர் நான்முகனை அழைத்து "நீ வேள்வி செய் என்றான். இதனைக்கண்ட விஷ்ணு சிவபெருமானைத் தொழுதுதான் நீ குறைவில்லா செல்வத்தையும் எல்லா வளத்தையும் பெற்றாய். எனவே அவரை கண்டிப்பாக அழைக்க வேண்டு மென்றார். நான்முகனும், அதையே ஆமோதித்தார். பின் மற்ற அனைவருக்கும் இந்த யாகம் முறையற்றது என்றனர். இதனைக் கேட்ட சத்ததந்து மிகவும் ஆத்திரத்துடன் பற்களைக் கடித்து கோபப்பார்வைப் பார்தத்தான். இதனால் என்ன விளைவு ஏற்படுமோ என அனைவரும் பயந்தனர். இருப்பினும் அந்த



வேள்வியை அவன் முடித்தான். இச்செய்தி நாரதர் மூலம் சிவபெருமானை அடைந்தது. கோபம் கொள்ளச் செய்தது இச்செய்தி. எனவே உடனே மண்டலத்தை தேராக்கி, உலகை சக்கரமாக்கி, அக்னியை வில்லாக்கி,சந்திரனை நாணாக்கி, வருணனை பாணமாக்கி, குமரனை தேரோட்டுபவனாக்கு போர்க் கருவிகளுடன் தன்னருகில் இருந்த வீரபத்திரரை நோக்கி சத்ததந்துவை அழித்து வரும்படி ஏவினார். அதற்கு அடிப்பணிந்த வீரபத்திரர் மேருமலையை அடைந்தார்.

இச்செய்தி தெரிந்த தேவர்குலம் நாலாபுறமும் சிதறித் தெரித்து ஒடினர். ஆனாலும் அனைவரையும் பிடித்து தான் நினைத்தபடி துன்புறுத்தினார். பின்னர் தனது வர்ணாஸதிரத்தால் வேள்வியை அழித்தார். உடன் சத்ததந்து கோப்பட, அவனையும் அகோர அஸ்திரத்தினால் கொன்றார். இவரது கோபத்தைக் கண்ட தேவ முனிவ, ரிஷிக்களின் மனைவியர் தங்கள் கணவரை தரும்படி வேண்ட, இறந்த வர பிழைந்தனர். பின் அவர்களை அவரவர்க்குரிய பதவியில் அமர்த்தினார். பின் வீரபத்திரர் சிவபெருமானிடம் சரணடைந்தார். அகோர அஸ்திரத்தினால் சத்ததந்து வேள்வியை அழித்துக் கொன்ற மூர்த்தமே "அகோர அத்திர மூர்த்தி எனப் பெயர் பெற்றது. இவரை திருவெண்காட்டில் காணலாம். இங்கு மட்டுமே இவரது திருவுருவம் <உள்ளது. மாசிமாத கிருஷ்ணபட்ச ஞாயிறு இரவு 12 மணிக்கு இவர் தேன்றினார். ஒவ்வொரு ஆண்டும் இதே நேரத்தில் சிறப்பு பூஜை நடைபெறும். மேலும் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை இரவும் அகோர பூஜை நடைபெறுகிறது. இதில் கலந்துக் கொள்ள அவரது பூரண அருள் நமக்குக் கிட்டும். மேலும் வில்வம் அல்லது செவ்வரளி அர்ச்சனையும், பால் நைவேத்தியமும் திங்கள், பிரதோஷம் அன்றுக் கொடுக்க பகைவர் ஒழிவர். நீண்டகால வழக்கு பைசலாகும். தம்பதியருடையே ஒற்றமை அதிகரிக்கும்.



# 44. தட்சயக்ஞஹத மூர்த்தி



தக்கன் சிவபெருமானை மதியாது சிவநிந்தனையே இல்லாமலிருந்தான். இதனையறிந்தோர் தக்கனிடம் சென்று சிவபெருமான் ஒருவரே கடவுள் அவரை பகைக்க வேண்டாமென்றும், அவரை வணங்கி வரவும் பணித்தனர். இதைக்கேட்ட தக்கனும் கையிலை சென்றான். ஆனால் அங்கேயிருந்த கணநாதர் தக்கனை திருப்பியனுப்பினார். இதனால் மனம் நொந்த தக்கன் தன் தலைநகர் திரும்பி அனைவரிடத்திலும் கையிலையில் நடந்ததைக் கூறி சிவபெருமானை வணங்க வேண்டாமெனத் தடுத்தான். அதற்கு தேவர்குழாமும் ஒப்புக் கொண்டது, பிரமனைத் தவிர. ஒருமுறை பிரமன் யாகமொன்று நடத்த இருந்தான். அதற்கு அழைக்க சிவபெருமானை அழைத்துவர கையிலை சென்றான். அவரையும் அழைத்தான். அவரோ தனக்கு பதிலாக நந்திதேவரை அனுப்புவதாகக் கூறினார். அதன்படி யாகத்திற்கு நந்திதேவர் தனது பூத கணங்களுடன் சென்றார். இதனைக்கண்ட



தக்கன் சிவபெருமானுக்கு அவிர்பாகம் கொடுக்காமல், திருமாலு<க்கு கொடுக்கச் சொல்லி கட்டாயப்படுத்தினான். இதனால் கோபமுற்ற பிரமன் தக்கனின் தலை துண்டாகவும், அவனது கூட்டாளிக்கு சூரபத்மனால் ஆபத்து உண்டு எனவும் சாபம் விடுத்தார். இதனால் அவ்வேள்வி தடைபட்டது. இதற்கிடையே தக்கன் ஒரு யாகம் நடத்த இருந்தான். அதனால் சிவபெருமானுக்கு அவிர்பாகம் கொடுக்காமல் நடத்த நினைத்தான். உடனே தத்சி முனிவர் அதுமுறையற்றது, சிவபெருமான் இன்றியாகம் செய்தல் கூடாது என்றார்.

பார்வதிதேவியும் அவிர்பாகம் பெற உக்கிரமாகாளி, வீரபத்திரர் உடன் வந்திருந்தார். பார்வதி தேவி கேட்டும் அவர்க்குரிய அவிர்பாகம் மறுக்கப்பட்டது. இதனால் தேவர்கள் அனைவரும் ஊமை போல் காணப்பட்டனர். இதனால் பெருங்கோபம் கொண்ட வீரபத்திரர் தனது தண்டத்தால் திருமாலை அடிக்க அவர் வீழ்ந்தார். பின் பிரமன் வீழ்ந்தார். வீரபத்திரர் சந்திரனைத் தன் காலடியில் தேய்த்தார். வீரபத்திரிரன் பூதகணங்கள் தக்கன் இருப்பிடம் யாகசாலை, கோட்டை, மதில் என அனைத்தையும் அழித்தனர். வீரபத்திரர் அனைத்து தேவர்களையும் துவம்சம் செய்தார். தேவகணங்களை வதைத்தார். தேவர்களின் மனைவியர், இந்திராணி, தக்கனின் மனைவியர் என அனைவரையும் பார்வதி தேவியும், காளியும் துவம்சம் செய்தனர். அனைவரும் ஏதாவது ஒரு குறைபாட்டுடன் இருக்கும்படி வீரபத்திரர் செய்தார். போர் உச்சத்தை அடைந்ததும் சிவபெருமான் தோன்றி வீரபத்திரரை சாந்தப்படுத்தினார். பார்வதியின் உத்தரவிற்கேற்ப மாண்ட அனைவரும் உயிர்பெற்றனர். தக்கனும் பிழைக்க வைக்கும்படி பிரமன் வேண்ட, உடனே வீரபத்திரர் ஒரு ஆட்டுத்தலை அவனுடலில் பொருத்தி அவனை உயிர்பித்தார். அவன் பார்வதி-சிவபெருமான் தரிசனம் பெற்று சிவகணங்களில் ஒன்றானான். சிவபெருமான் தன்னை வணங்காத தக்கனின் வேள்வியை அழிக்க எடுத்த மூர்த்தமே "தட்சயக்ஞஷத மூர்த்தி யாகும். தரங்கம்பாடி - செம்பனார் கோயில் அருகே உள்ளத் தலம் திருப்பறியலூர் ஆகும். இறைவன் திருநாமம் வீரட்டேசர் என்பதும், இறைவி திருநாமம் இளம்கொம்பனையாள் என்றும் அழைக்கப்படுகிறார்கள். வில்வார்ச்சனையும், பால் நைவேத்தியமும் திங்கள், பிரதோஷம் அன்று கொடுக்க பகைவர் தொல்லைத் தீரும். கோர்ட் வழக்கு சாதகமாகும். தம்பதியர் ஒற்றுமை ஓங்கும்.



# 45. கிராத மூர்த்தி -வேட மூர்த்தி




பாரதப் போரில் பஞ்ச பாண்டவர்கள் வனவாசம் மேற்க் கொண்டிருந்தனர். அங்கே அவர்களின் குகைளை கேட்கவும், ஆலோசனைக் கூறவும், மேற்கொண்டு செய்ய வேண்டியதைப் பற்றிப் பேசவும் வியாசமுனிவர் கானகம் சென்றார். அங்கே பலவாராக இன்னல்பட்டுக் கொண்டிருந்த பாண்டவர்களுக்கு தேவையான ஆலோசனைகளைச் சொல்லியபடி வந்தார். அப்போது கௌரவர்களைப் போரில் வெல்வதற்கு வேண்டிய சக்திவாய்ந்த அஸ்திரத்தைப் பெற சிவபெருமானை நோக்கி தவமியற்றச் சொன்னார். அவரது வாக்குப்படியே குறிப்பிட்ட நல்லநாளில் தவம் செய்வதற்கு ஏற்ற உடையுடன், பொருளுடன் அர்ச்சுனன் வெள்ளி மலையை அடைந்தான். அங்கே வசிக்கும் முனிவர், ரிஷிகள், தேவகணத்தினரின் ஆசியுடன் அங்கு சிவபெருமானை மனதில் நினைத்து, வெந்நீரணிந்து இருகைகூப்பி, ஒரு காலை மடித்து நின்றவாறு தவம் செய்யலானான். அர்ச்சுனனின் தவத்தை



சோதிக்க இந்திரன் விரும்பினான். ஆகவே தேவலோக நாட்டியக் கன்னிகளை அனுப்பி தவத்தைக் கலைக்கும்படி செய்தான். அவர்கள் அர்ச்சுனன் முன்பு பலவித நாட்டியமாடியும் தவம் கலையவில்லை.

தேவகணங்கள் மூலம் அர்ச்சுனனின் தவத்தை அறிந்த பார்வதிதேவி சிவபெருமானிடம் கூறினார். அப்போது சிவபெருமான் வேடராகவும், பார்வதி தேவி வேடுவச்சியாகவும், முருகன் குழந்தையாகவும், வேதங்கள் நான்கும் வேட்டை நாய்களாகவும், தேவகணங்கள் வேட்டுவக் கூட்டமாகவும் மாறியது. அர்ச்சுனன் தவம் செய்யும் இடத்தை அடைந்தனர். அங்கே அர்ச்சுனனின் தவத்தை கலைக்க முகாசுரன் பன்றியாக மாறி வேகமாக வந்தான். இதனைக்கண்ட சிவபெருமானும் பன்றி மீது அம்புவிட, அர்ச்சுனனும் பன்றி மீது அம்புவிட இதனால் தேவகணங்களாக வேட்டுவக் கூட்டத்தினர் ஒருவர் கொன்ற மிருகத்தை மற்றொருவர் சொந்தம் கொள்வதாகாது என்றனர். இதனால் வாய்ச்சண்டை முற்றியது. அர்ச்சுனனின் வில்லின் நாணை சிவபெருமான் அறுத்தார். பதிலுக்கு வில்லால் சிவனை அடித்தான் அர்ச்சுனன். அவ்வடி உலகஉயிர்கள் அனைத்தின் மீதும் பட்டது. உடன் சிவபெருமான் தம்பதி சமேதராய் காட்சிக் கொடுத்தார். அதற்கு பின் அஸ்திரத்தையும் (பாசுபதம்) பெற்றான், அர்ச்சுனனின் தவத்திற்கு இடையூரான முகாசுரனைக் கொல்ல சிவபெருமான் ஏற்ற வடிவமே "கிராத மூர்த்தி யாகும்.

குடவாசல் அருகே அமைந்துள்ள தலம் திருக்கொள்ளம் புதூர் ஆகும். அவ்வூரில் இத்தலத்தை "நம்பர் கோயில் என்றழைக்கின்றனர். இறைவன் பெயர் "வில்வாரண்யேஸ்வரர் இறைவி பெயர் அழகு நாச்சியார். இங்குள்ள அகத்திய தீர்த்தத்தில் நீராடி வில்லார்ச்சனை செய்ய பகையை எதிர் கொள்ளும் ஆற்றல் வரும். மே<<லும் செவ்வரளி அர்ச்சனையும், வெண்பொங்கல் அல்லது மிளகு அடை நைவேத்தியமும் செவ்வாய் அன்றுக் கொடுக்க பகைமை மறந்து நண்பராகும் பேறும், சொத்துச் சண்டையும் முடிவிற்கு வரும்.



# 46. குரு மூர்த்தி



திருவாதவூரில் அவதரித்தவர் மாணிக்கவாசகர். அவர் சிறுவயதிலேயே வேதாகமங்களை நன்கு அறிந்தவரானார். இவரது சிறப்பையறிந்த மதுரை மன்னன் அரிமர்தனப்பாண்டியன் இவரை தனது அமைச்சராக்கி தென்னவன் பிரமராயன் என்றப் பட்டத்தையும் கொடுத்து மேலும் சிறப்பித்தார் மாணிக்கவாசகருக்கு திருவருள் புரிய வேண்டியிருந்தார். இந்நிலையில் அமைச்சராகவும், இறை தவமே முழுமூச்சாகவும் வாழ்ந்த மாணிக்கவாசகரிடம் வேண்டிய அளவு பொருள் கொடுத்து கீழ்கடல் பகுதிகளில் சென்று குதிரைகள் வாங்கிவரும்படி அனுப்பினார் மன்னன். அவர் திருப்பெருந்துறையை அடைந்தவுடன் அவருள் தன்னுடைய இறைவனுடன் ஐக்கியமானதுப் போல் ஒரு உணர்வு எழ, அனைத்திடங்களிலும் தேடினார். இறுதியில் குருமூர்த்தியைக் கண்டு வணங்கி பாடி துதித்து, பரவசப்பட்டு, ஆனந்தப்பட்டு, ஆவிஉருக, ஆனந்தக் கூத்தாடினார். அவர்க்கு



திருஐந்தெழுத்தை உபதேசித்தார். பின்னர் குருமூர்த்தி மாணிக்கவாசகரை அங்கேயிருக்கச் சொல்லி மறைந்தார். அவரது சொல்லுக்கு கட்டுப்பட்ட அவர் அங்கேயேயிருந்தார். தன்னுடன் வந்த காவலர்களிடம் ஆடித்திருத்திங்களில் குதிரைகள் வருமென அரசனிடம் சொல்லும்படி அனுப்பினார். பின்னர் கொண்டுவந்தப் பொருள் அனைத்தையும் ஆலய திருப்பணிக்கே அர்ப்பணித்தார், அவர் சொல்லியது போல் குதிரையும் வரவில்லை, மாணிக்கவாசகரும் வரவில்லை. மன்னன் இந்நிலையில் ஓலை அனுப்பினார். அதற்கு பதில் மாணிக்கவாசகர் சிவபெருமான் கூற்றுப்படி ஆவணியில் குதிரைகள் வரும் என பதிலோலை அனுப்பினார். பின்னர் சிவபெருமான் மாணிக்கவாசகரின் கனவில் தோன்றி நீ முன் செல்க குதிரைகள் பின்வரும் என்றார். அதன்படி மாணிக்கவாசகர் முன் சென்று மன்னனிடம் சேர்ந்தார். பக்குவம் பெற்ற மாணிக்கவாசகருக்கு குருவாகத் தோன்றி திருஐந்தெழுத்தை உபதேசம் செய்தவர் சிவபெருமான். எனவே அவரது பெயர் குரு மூர்த்தி என்றானது.

குடந்தை - காரைக்கால் நடுவே அமைந்துள்ளது பெருந்துரையாகும். இறைவனது திருநாமம் பிரணவேஸ்வரர் இறைவி திருநாமம் மலையரசி. இவரே குருவடிவம் கொண்டு மாணிக்கவாசகரை ஆட்கொண்டு உபதேசித்தவர். இங்கமைந்துள்ள மங்கள தீர்த்ததில் நீராடி, வன்னி இலை அர்ச்சனை செய்ய நமக்கும் உபதேசம் செய்வார் என்பது ஐதீகம். இவரை வெண்தாமரை அல்லது மகாவில்வ இலை அர்ச்சனையும், வாழை, மா, கரும்பு, திராட்சை கொண்டு நைவேத்தியமும் வியாழக்கிழமைகளில் செய்துவர தொழில் அபிவிருத்தியும், அனைத்துக் கலைகளில் தேர்ச்சியும் திருஐந்தெழுத்தின் மகிமையும் புரியும்.



# 47. அசுவாருட மூர்த்தி




மாணிக்கவாசகர் சிவபெருமானின் கூற்றுப்படி ஆவணி திங்களில் குதிரைகள் வரும் என அரண்மனையில் காத்திருந்தார். அரசரும் மாணிக்கவாசகரை அழைத்து குதிரைகள் எப்பொழுது வருமென கேட்டார். இன்னும் ஓரிரண்டு நாட்களில் வரும் என்றார். அனைவரும் காத்திருந்தனர், ஆனால் குதிரைகள் வரவில்லை. ஏமாற்றமே மிஞ்சியது. ஆகவே மாணிக்கவாசகரைத் துன்புறுத்தி, கொடுமைப்படுத்தி சிறையிலடைத்தார். சிறையில் மாணிக்கவாசகர் சோர்ந்துவிடாமல் சிவபெருமானைத் துதித்தபடியே இருந்தார் பாடல்கள் பலப்பாடியபடி இறைவனை துதித்தார். இதனால் மனம் மகிழ்ந்து சிவபெருமான் அவர் தனது கணங்களை அழைத்து கானகத்திலுள்ள நரிகள் அனைத்தையும் பிடித்து வருமாறும், பின்னர் நரிகளை பரிகளாக்கி அவற்றை அழைத்துச் செல்லும் பொறுப்பை தனது கணங்களுக்கு ஒப்படைத்து விட்டு, அதன் தலைவர் பொறுப்பை ஏற்று அதனை வழிநடத்தியபடி சிவபெருமான் உயர்ந்த வகை குதிரைமீதேறி



வந்தார்.

குதிரைகள் வருவதைக் கண்டு மன்னன் மனம் மகிழ்ந்து அனைவரையும் உபசரித்தார் குதிரைகளை லாயத்தில் கட்டினார். இதனால் மாணிக்கவாசகரை விடுவித்தான். இரவில் குதிரைகள் தனது சுயரூபத்தைக் காட்டி நரிகளாக மாறி கானகத்திற்கேச் சென்றனர். இச்செய்தி மன்னனை அடைந்ததும் மாணிக்கவாசகர் பழையபடி கொடுமைபடுத்தப்பட்டு சிறைக்குச் சென்றார். அச்சமயத்தில் மாணிக்கவாசகரின் எண்ணத்தின் விளைவாகவும், சிவபெருமான் மேல்கொண்ட நிந்தனையாலும், வைகையில் வெள்ளம் வந்து கரை உடையும் அபாயம் ஏற்பட்டது. அதையும் அடைக்கும் பணியில் வீட்டிற்கொவர் ஈடுபட்டிருந்தனர். அப்பொழுது வயதானப்பாட்டி தனக்கு ஆள்இல்லாமல் வருந்தினார். அப்பொழுது கூலியான் போல் வேடமுற்று பாட்டியின் பிட்டுவை உண்டு வேலை செய்யாமல் படுத்திருந்தார். அச்சமயம் அங்குவந்த மன்னன் சிவபெருமானைப் பிரம்பால் அடிக்க அவ்வடி உலக உயிர்கள் ஒவ்வொருவரின் மேலும் பட்டது. உடன் வானில் அசரீரீ தோன்றி மாணிக்கவாசகரை விடுவிக்கும்படி சொன்னது உண்மையறிந்த மன்னன் அவரை விடுவித்து சிவபெருமானிடமும், அவரிடமும் மன்னிப்பு வேண்டினான். மாணிக்கவாசகர்க்காக நரிகளை பரிகளாக்கி அதன் தலைவனாக சென்று வந்த கோலமே அசுவாருட மூர்த்தி யாகும்.

மதுரையில் கோயில் கொண்டுள்ள இறைவனது திருநாமம் சொக்கநாதர். இறைவி திருநாமம் மீனாட்சி யாகும். இங்கமைந்துள்ள பொற்றாமரைக் குளத்தில் நீராடி இறைவனை வணங்கினால் பக்தி நமக்கு மேலிடும். இவர்க்கு வில்வார்ச்சனையும், சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியமும் திங்களன்று கொடுக்க வாகன யோகம், மனம் பக்குவமடையும்.



# 48. கஜாந்திக மூர்த்தி




சூரபத்மனின் தொல்லைகளைப் பொறுக்க முடியாத இந்திரன் தன் மனைவி இந்திராணியுடன் சீர்காழியில் மறைவாக வசித்து வந்தான். அங்கே சிவபெருமானைத் துதித்துக் கொண்டிருந்தான். இதற்கிடையே தேவர்கள் கொடுமைத் தாங்காததால் இந்திரனைத் தேடி சீர்காழி வந்தனர். இந்திரனையும் அழைத்துக் கொண்டு திருக்கைலை அடைந்தனர். இந்திராணி ஐயப்பனின் பாதுகாப்பில் இருந்தார். கைலையில் சனகாதி முனிவர்கள் யோகத்தினைப் பற்றி சிவபெருமானிடம் அளவளாவிக் கொண்டிருந்ததால் இவர்கள் பல ஆண்டுகள் காத்திருந்தனர். அச்சமயத்தில் சூரபத்மனின் தங்கையான அசுமுகையும் அவளது தோழியான துன்முகியும் சீர்காழி சென்றனர். இந்திராணியை சூரபத்மனை மணம் செய்து கொள்ளச் சொன்னார்கள். இதற்கு மறுத்த அவரை இழுத்துக்கொண்டு சென்றனர். இதைப்பார்த்த ஐயப்பன் அவர்களுடன் கடுமையான போர் நடத்தினார். அவர்கள் இந்திராணியை கொடுமைப்படுத்தியதற்காக அவர்களின் கையையும் வெட்டி அனுப்பினார். இச்செய்தி கேள்வியுற்ற சூரபத்மனின் மகனான



பானுகோபன் அவர்களைப் பழிவாங்கப் புறப்பட்டான். பின்னர் சூரபத்மன் தனது சகோதரிகளின் கையை வளரச் செய்தான். அதன்பின் பானுகோபன் இந்திராணியையும், இந்திரனையும் தேடி அலைந்தான் அவர்களைக் காணவில்லை. உடனே இந்திரலோகம் அடைந்தான் அங்கும் காணாததால் இந்திரனின் புத்திரனாகிய ஜெயந்தனிடம் போரிட்டு அவர்களது ஐராவதத்துடன் கிளம்பினான்.

அப்போரில் ஜெயந்தன் மயங்கினான். இதனால் ஐராவதம் பானுகோபனுடன் சண்டையிட்டது. அதுவும் அடிவாங்கி பின்வாங்கியது. பின் அனைத்து தேவர் குழாமையும் அமர்த்தினான். இதனால் மனம் வருந்திய ஐராவதம் திருவெண்காடு சென்று முப்பொழுதும் நீராடி இறைவனைத் துதித்தது. இதனால் மனம் மகிழ்ந்த சிவபெருமான் அதற்கு காட்சிக்கொடுத்தார். அதன்பின் அதன் குறைகளை நீக்கி அதன் ஒடிந்த கொம்புகளை புதுப்பித்தார். பழையபடி இந்திரனின் வாகனமாக்கினார். அதற்குப்பிறகு முருகபெருமானால் சூரசம்ஹாரம் முடிந்தவுடன் இந்திரன் தன்னுலகம் திரும்பினான். ஐராவதமும் அவனுடன் சென்றது, தேவர்குழாம் மீட்கப்பட்டனர். ஐராவதமாகிய ஒரு யானையின் வேண்டுகோளுக்கு மனமிரங்கி காட்சிக் கொடுத்து வேண்டும் வரம் கொடுக்க சிவபெருமான் கஜாந்திக மூர்த்தி என வணங்கப்படுகிறார். இவரை சீர்காழியருகே அமைந்துள்ள திருவெண்காட்டில் வணங்கலாம். இங்குள்ள இறைவனின் திருநாமம் திருவெண்காட்டுநாதர் என்றும் இறைவி திருநாமம் பிரம்மவித்யா நாயகி என்றும் வணங்கப்படுகிறது. இங்கமைந்துள்ள அக்னி, சூர்ய, சந்திர தீர்த்ததில் அடுத்தடுத்து நீராடி இறைவனை வழிபட இந்திரலோக வாழ்வு தித்திக்கும். மே<லும் மகாவில்வார்ச்சனையும் சர்க்கரை பொங்கல் நைவேத்தியமும் திங்களன்று கொடுக்க, தடைவிலகி எடுத்தக் காரியம் ஜெயமாகும் என்பது ஐதீகம்.



# 49. சலந்தரவத மூர்த்தி




தேவலோகத்தரசனான இந்திரன் திருக்கைலைக்குச் சென்று சிவபெருமானை வணங்கிவர கிளம்பினார். வழியில் சிவபெருமான் உருமாறி நின்றிந்தார். இதை கண்ட இந்திரன் அவரிடம் பலவிதமானக் கேள்விகள் கேட்டார். எதற்கும் பதில் கொடுக்காமல் இருந்தபடியால் இந்திரன் சிவபெருமானை தன்னுடைய வச்சிராயுதத்தால் அடித்தான். அது தவிடுபொடியானது, இதனால் கோபமடைந்த சிவபெருமான் ருத்ரவடிவம் கொண்டார். உண்மை அறிந்த இந்திரன் பயந்துப்போய் அவரிடம் மன்னிக்க வேண்டினார். எனவே கோபம் அடக்கினார். அப்பொழுது கோபத்தால் உண்டான வியர்வையை வழித்தெடுத்தார். அது கடலில் விழ, அதுவொரு குழந்தையானது. அதனை கடலரசன் எடுத்து வளர்த்தான், அக்குழந்தையின் பெயர் சலந்தரன் ஆகும். சலந்தரன் வளர்ந்தவுடன் அசுரர்களுடன் சேர்ந்து பலவகையான ஆற்றல்களைப் பெற்றான். பின் தேவலோக தச்சனான மயனின் மேற்பார்வையில் ஒரு அழகிய தேரை உருவாக்கினான்.

அதன்பின் விருத்தை என்பவளை மணந்து வாழ்ந்து வந்தான். ஒருமுறை தேவர்களுடன் போரிட முடிவு செய்து மேருமலைக் சென்றான். அங்கிருந்த தேவர்கள் பயந்து திருமாலிடம் கூறினர். திருமால் சலந்தரனுடன் இருபதினாயிரம் ஆண்டுகள் போரிட்டும் முடிவில் சலந்தரனே வென்றான் திருமாலின் பாராட்டையும் பெற்றான். இந்திரன் பயந்துக் கொண்டு திருக்கைலையிலேயேத் தங்கினான். இந்திரனின் இச்செயலைக் கேள்வியுற்ற சலந்தரன் திருக்கைலைச் சென்றான். இதற்கிடையே இந்திரனின் பயத்தைப் போக்கிய சிவபெருமான் சலந்தரனை அழிப்பதாக வாக்குறுதிக் கொடுத்தார். அதன்படி வயதான முனிவர் போல் தளர்ந்த உடல், கையில் கமண்டலம், தடியை ஊன்றிய படி சிவபெருமான் மாறினார். அவரது சேனைகள் அவர் பின்னால் நின்றன.

சலந்தரனை வழிமறித்த சிவபெருமான் அவனைப் பற்றி விசாரித்தார். சலந்தரன் தன்னைப் பற்றியும் தன்தகப்பனைப்பற்றியும் கூறி சிவபெருமானுடன் போரிட வந்துள்ளதாகக் கூறினான். சிவபெருமானும் சிரித்துக் கொண்டே சிவனை எதிர்த்தால் ஒரு நொடியில் மாள்வாய் என்றார். சலந்தரன் அவரிடம் தன் ஆற்றலைக் காட்டினான். உடனே வயதான தோற்ற சிவபெருமான். நான் சிவனுக்கு அடுத்தநிலை உள்ளவன் எனவே இந்த சக்கரத்தை உன்தலையில் வை பார்ப்போம் என்றபடியே தனது பாதத்தால் தரையை கீறி ஒரு சக்கரத்தை உண்டாக்கினார். உடனே சலந்தரன் அதை எடுத்து தலைமேல் வைக்க அது அவனை இருகூறாக்கியது. பின் சிவனிடம் தஞ்சமடைந்தது. பின் அசுரக்கூட்டத்தை சாம்பலாக்கினார். சலந்தரன் அழிந்ததால் அனைவரும் ஆனந்தப்பட்டனர். அவரவர் பதவியை மீண்டும் வகித்தனர். தேவர்கள் துயர்துடைக்க சலந்தரனை வதம் செய்த மூர்த்தியே சலந்தரவத மூர்த்தி யாவார். இவரை தரிசிக்க நாம் செல்லவேண்டியத் தலம் திருவாரூர் அருகேயுள்ளள திருவிற்குடி யாகும். இறைவன் வீரட்டானேஸ்வரர் இறைவி பரிமளநாயகி. இங்குள்ள சங்கு, சக்கர, ஞானதீர்த்தங்களினால் சலந்தரவத மூர்த்தியை அபிசேகம் செய்ய அவர்களின் தீராத துயரத்தினையும் தீர்த்து மஞ்சள்நிற மலர் அர்ச்சனையும், புளிசாத நைவேத்தியமும் செவ்வாயன்றுக் கொடுக்க விஷப்பூச்சிகள் அரவம் இவற்றினால் ஏற்படும் தொல்லை அழியும்.



# 50. ஏகபாதத்ரி மூர்த்தி




தொடக்கமும், முடிவும் அற்றவன் சிவபெருமான். அவரே உலகின் ஆதியாகவும் அந்தமாகவும் இருப்பவர், அவரன்றி எப்பொருளும் பிறப்பதுமில்லை, இறப்பதும் இல்லை அனைத்து இயக்கமும் அவராலேயோ தொடர்ந்து நடைபெறுகின்றன. அவராலேயே முடிகின்றன, அவர் ஒரு பாதம் கொண்டவராக உலகை உருவாக்க சுத்தமாயையின் அடிப்புறமாக அசுத்தமாயையின் இடத்தில் புலப்படாத பல மகான்களை உருவாக்கினார். அவர்களின் ஆணவம் மட்டும் கொண்ட ஆன்மாவாகவும், ஆணவம், கன்மம் என இரண்டு கொண்ட ஆன்மாக்களும் மும்மலம் கொண்ட ஆன்மாக்களுக்கு வேண்டிய உடல், செயல், ஐம்புலன்கள், சுகதுக்க அனுபவங்கள் ஆகியவற்றிற்கு உதவுபவராக உள்ளன. மேலும் இவரே மும்மூர்த்திகளாகி படைத்தல், காத்தல், அழித்தல் தொழில்களைச் செய்கின்றார். இவரது அனைத்து திருவிளையாடல்களும், அனைத்தும் மூர்த்தங்களும் உலக



ஆரம்பத்தில் இவரிடம் தோன்றி இவரிடமே முடிவில் ஐக்கியமாகி விடுகின்றது. இவரது இதயத்தில் உருத்திரனும், இடப்பாகத்தில் பிரமனும், வலப்பாகத்தில் திருமாலும், அவரது கண்களில் இருந்த சந்திர சூரியனும், அவரது துவாசத்திலிருந்து வாயுதேவனும், கழுத்திலிருந்து கணேசனும், (தொப்பையில்) வயிற்றிலும் இருந்து யமன், இந்திரன், வருணன், குபேரனும், பிறப்பர், மேலும் பிரத்யங்கத்திலிருந்து ஐம்பது கோடி தேவர்களும் தோன்றுவர். அவரது முடிவுகளில் இருந்து பலகோடி முனிவர்கள் தேவர்கள் தோன்றுவர். ஒவ்வொரு முறையும் உலகம் புதிதாய் புதுப்பிக்கும் போது மேற்க்கண்ட அனைவரும் தோன்றுவர். உயிரினங்களுக்கு வேண்டிய அனைத்து உதவிகளையும் செய்து, அவர்களின் ஆசைகளை நிறைவேற்றி, தீயவர்களை அழித்து இறுதியில் அவருள்ளே ஐக்கியமாவார்கள். மீண்டும் மீண்டும் தோற்றுவித்து தம்முள் அடக்குவதால் இவர்க்கு பிறப்பென்பதும் இல்லாமல் இறப்பென்பதும் இல்லாமல் அனைத்தின் பிறப்பிடமான சிவபெருமானை நாம் ஏகபாதத்ரி மூர்த்தி என்போம்.

மாயவரமருகேயுள்ள தலம் இடைமருது ஆகும். இங்குள்ள இறைவன் பெயர் மகாலிங்கேஸ்வரர், இறைவி பெருநலமுலையம்மை யாகும். இங்கமைந்துள்ள காருண்ய தீர்த்ததில் நீராடி அஸ்வமேத பிரகாரத்தில் வலம் வர ஏவல், துர்தேவகைள் மனநிலை பிறழ்வு போன்ற நோய்கள் மற்றும் கொடுமைகள் விலகும், இவர்க்கு வில்வார்ச்சனையும், வெண்பொங்கல் நைவேத்தியமும் வெள்ளிக்கிழகைளில் கொடுக்க மூன்று காலத்தையும் அறியும் அறிவு, முப்பிணி அகவல், நீள் ஆயுள் உண்டாகும்.



# 51. திரிபாதத்ரி மூர்த்தி




சிவபெருமானே மகேஸ்வரனாகி அனைத்து உயிர்களையும் தோற்றுவிப்பவர். பின் அனைவரையும் தம்முள்ளே ஒடுக்கிக் கொள்வர். அவ்வாறு ஒடுக்குவதை நாம் நித்தியம், நைமித்தியம் பிராகிருதம் ஆத்தியந்திகம் என நான்காகக் கொள்ளப்படும். இவற்றில் நித்தியம் என்றால் உயிரினங்கள் தங்கள் ஆயுளின் முடிவில் சிவனை அடைதலாகும், நைமித்தியம் என்றால் நான்முகனின் பகல் கூடிய உலக சஞ்சலத்தால் மறைதல் பிராகிருதம் என்றால் பிரமதேவனின் கால அளவாகும். அதுத்தவிர உலக உயிரெல்லாம் மடிந்து ஓடுங்குதலாகும். ஆத்தியந்திகம் என்றால் உயிரினங்கள் முக்திபெறுதலாகும். இதில் நித்தியம் வெளிப்படையானது. இதில் நைமித்தியம் பிரளயத்தின் இறுதியில் ஈரேழு உலகமும் சூரியக்கதிர்களை வாங்கி வெளியிடுவதால் அனைத்துமே பிரகாசமாகும். அதனால் கடல் அனைத்தும் வற்றிவிடும். இவ்வாறு நடந்த பின்பு நூறாண்டுகளில் அனைத்து திசைகளிலும் மழைப் பொழிந்து அனைத்துலகத்தையும் நீரால் நிரப்பும். இக்காலம் பிரமன்

யோகநித்தரை செய்யும் காலமாகும்.

அடுத்து பிராகிருதப் பிரளயம் பற்றி பார்ப்போம். பரமானு இரண்டுடையது அணு, அணு மூன்றுடையது திரிசரேணு, திரிசரேணு மூன்றுடையது துடி, துடி மூன்றுடையது வேதை, வேதை முன்றுடையது லவம், லவம் மூன்றுடையது நிமிடம், நிமிடம் மூன்றுடையது கணம், கணம் ஐந்துடையது காட்டை, காட்டை பதினைந்துடையது லகு, லகு பதினைந்துடையது கடிகை, கடிகை இரண்டையது நாள், நாள் பதினைந்துடையது பட்சம், பட்சம் இரண்டுடையது மாதம், மாதம் இரண்டுடையது பருவம், பருவம் மூன்றுடையது அயனம், அயனம் இரண்டையது ஆண்டு, ஆண்டு நூறுடையது மனித ஆயுள், மனித ஆயுள் முப்பதுடையது தென்புறத்தவரின் ஒருசான், மரதம், பன்னிரெண்டுடையது தேவர்களுக்கு ஒரு நாள், அத்திகை ஆண்டு பன்னிரெண்டு ஆயிரம் கழிந்தால் அது தேவர்களுக்கு ஒரு ஊழி, நான்கு ஊழி கொண்டது பிரமனுக்கு ஒரு பகல். இவ்வாறு அனைத்து உயிரினங்களும் சிவபெருமானிடமே தஞ்சம். இதில் மும்மூர்த்திகளும் நேரத்தில் சிவபெருமான் எழுப்பிய கோலமே திரிபாதத்ரி மூர்த்தி யாகும், அதாவது மூன்று பதமான முர்த்திகளும் இவரிடம் அடக்கம். இவரை திருஇடைமருதூரில் தரிசிக்கலாம், அத்தலத்தில் அவருக்கும் சொக்கநாதருக்கும் அபிசேகம் செய்து மேகராக குறிஞ்சிப் பண் பாடினால் கோடையாயினும் மழை பொழியும். இவர்க்கு தும்பை அர்ச்சனையும், மிளகு அடை நைவேத்தியமும், புதனன்று கொடுக்க அறிவு விருத்தியடையும் முக்காலம் அறியும் ஆற்றல் ஏற்படும்.



# 52. ஏகபாத மூர்த்தி




கருத்திற்கு எட்டாத, வண்ண, குணமில்லாத, அறியமுடியாப் பொருளாய், எங்கும் நீக்கமற நிறைந்துள்ளவராய், அழியா சோதியாய் அமைந்துள்ளவர் சிவபெருமான். அவர் அனைத்து ஆன்மாக்களிலும் ஆணவம் மட்டும் நிலையாக இருப்பதை அறிந்தார். அதனை அகற்ற அருள் செய்தார். அதனால் ஞானத்தை கொடுத்து அதன் மூலமாக ஆணவம், கன்மம், மாயையை அகற்றி இறுதியில் தூய்மையான தன்னை வந்து அடையும்படி செய்தார். எனவே ஐந்தொழில்களான படைத்தல், காத்தல், மறைத்தல், அருளல் என ஐந்து வகையானத் தொழில்களைச் செய்து வந்தார்.ஊழிக்காலத்தில் உலகிலுள்ள அனைத்து உயிரிகளும் தன்னிடம் ஒடுங்க, தன் தேவியும் அவரிடம் ஒடுங்கி விடுவார். இவர் மட்டுமே அழியாமல் இருப்பவர் என ஆகமங்களும் வேதங்களும் கூறுகின்றன.



இவர் எத்தனை ஊழிக்காலங்கள் வந்தாலும் அனைத்தும் இவரிடமே ஆரம்பிக்கின்றன, இவரிடமே முடிகின்றன. இவர் தனியானவர் முதன்மையானவர். இவரிமிருந்தே அனைத்து விதமான சக்திகளும் பிறக்கின்றன. இவரிடமே தஞ்சமடைகின்றன. அனைத்து தேவர், மூர்த்திகளும் இவரை வணங்கியே அனைத்து வகையான செல்வங்களையும் பெற்றனர். இவர் உலகின் முதல்வர் முதன்மையானவராவர். இவர் அனைத்துக் காலங்களிலும், எல்லாவுலகமும் தன் திருவடியின் கீழ் இருப்பதால் இவரை நாம் ஏகபாத மூர்த்தி என்கிறோம். இவரைத் தரிசிக்க நாம் செல்ல வேண்டியத்தலம் தப்பளாம் புலியூர் ஆகும். இங்குள்ள ஏகபாத மூர்த்திக்கு செந்தாமரை அர்ச்சனையுடன், நைவேத்தியமாக சர்க்கரைப் பொங்கல் திங்கள்தோறும் கொடுத்து, நெய்தீபம் ஏற்றினால் திருமணம் விரைவில் கூடிவரும், குழந்தை பாக்கியம் கிடைக்கும், தடையில்லா செயல் நடைபெறும். மும்மலம் அழியும்.





# 53. கௌரி வரப்ரத மூர்த்தி




மந்திரமலை தவமியற்றியதாலேலே சிவபெருமான் தனது தேவியுடன் அங்கு சிறிது நாட்கள் தங்கினார். அச்சமயத்தில் அசுரனொருவன் நான்முகனை நோக்கி தவமிருந்தான். நான்முகன் யாது வேண்டுமென்றுக் கேட்க அவனோ பார்வதி தேவியின் உடலிருந்து தோன்றியப் பெண்ணைத் தவிர வேறொருவரால் எனக்கு அழிவு வரக்கூடாது என்றுக் கேட்டான். கொடுத்து மறைந்தார். இவ்வரத்தினால் அசுரனின் ஆட்டம் அதிகரித்தது. இவன் கொடுமையை தாளமுடியாத தேவர்குழாமின் சார்பாக நான்முகன் சிவபெருமானிடம் சென்று துயர் துடைக்கக் கூறினான். சிவபெருமானும் காளியை நினைத்து வருக என்றார். உடன் காளி வந்தார்.காளியிடம் அழைத்தக் காரணம் கூறினார். காளிதேவி தன்னுடைய கரிய நிறத்திற்காக கவலையுற்றார். உடனே சிவபெருமான் உன்குறைத்தீரும், நீ கௌரியாக மாறும்போது நிறமாவாய் என்று வாழ்த்தியனுப்பினார். உடன் காளி



இமயம் சென்று தவமியற்றினார்.தேவர்களையும், வானவர்களையும் காக்கும் பொருட்டு மலையரசனின் மகளான விமலை பொன்னிறத்தில் பிறந்தார். அவர் தன் கருமை நிறத்தை விளக்க துர்க்கையானார். பின்னர் அவர் நான்முகனால் கொடுக்கப்பட்ட சிங்க வாகனத்துடன் சென்று அசுரனைக் கொன்றார். கௌரி பார்வதி தேவியார் சிவபெருமானால் பொன்னிறமானார்.

வதத்திற்கு பின் மந்திரமலைக்குச் சென்றார். சிவபெருமானை வணங்கினார். உடனே சிவபெருமான் அவரைத் தன் தொடையின் மீது அமர்த்தினார். சிவபெருமானை நோக்கிய பார்வதிதேவியார் தனது கருமையான காளி நிறத்தை மாற்றி பொன்னிற மேனியான கௌரியானார். இவ்வாறு மாற்றியதால் அதாவது காளிக்கு வரம் கொடுத்து கௌரியாக மாற்றியதால் அவரது பெயர் கௌரி வரப்ரத மூர்த்தி யாகும்.காஞ்சியிலுள்ள ஏகாம்பரநாதர் கோயிலின் இறைவனது திருநாமம் ஏகாம்பரேஸ்வரர். இறைவி திருநாமம் ஏலவார்குழலி அம்மை. இங்கமைந்த மூலவர் மணலால் ஆனவர். உமாதேவியார் இங்குள்ள கம்பை நதிக்கரையில் மண(ல்) லிங்கம் அமைத்து வழிபட்டார். மேலும் இங்குள்ள தீர்த்தத்தில் மூழ்கி இறைவன் இறைவியை வழிபட கண் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் அகலும். தீர்த்தத்தின் மகிமையால் தோல் வியாதி குணமடையும். இவர்க்கு வில்வார்ச்சனையும் பழவகை நைவேத்தியமும், வெள்ளிக்கிழமை கொடுத்து நெய் விளக்குப் போட மாங்கல்ய பலம் கூடும். மக்கட் பேறு உண்டாகும். தம்பதியர் ஒற்றுமை ஓங்கும்.



# 54. சக்கர தான மூர்த்தி



குபன் என்றும் மன்னன் முன்னொரு சமயம் உலகம் முழுவதையும் ஒரேக் கொடியின் கீழ் ஆட்சிபுரிந்து வந்தான். அவன் பொருட்டு திருமால் ததீசி எனும் முனிவரை எதிர்த்து யுத்தம் செய்தார். அவ்வாறு யுத்தம் நடைபெறும்போது திருமாலால் தாக்குப்பிடிக்காத நிலை வந்தது. உடன் தனது சக்கராயுதத்தை அம்முனியின் மேல் ஏவினார் ஆனால் அது அம்முனிவரின் வச்சிரக்கையால் தாக்கி திரும்ப திருமாலிடமே சரணடைந்தது. உடன் திருமால் தன்னைப்போல் இன்னொரு உருவத்தைப் படைத்தார். ஆனாலும் விடாமல் அம்முனிவரும் தனது பாதக்கட்டை விரலை அசைக்க எண்ணற்ற திருமால்கள் தோன்றினார். உடனே திருமாலுக்கு புரிந்தது. இம்முனிவர் தம்மைவிட தவவலிமை அதிகம் பெற்றவர். எனவே இவரை எதிர்க்க முடியாது சிவபெருமானின் ஆயுதத்தால் தான் முடியும் என்று சென்றார். இந்த சக்கராயுதம் திருமாலிடம் வந்தக் கதை எப்படியெனில்



ஒரு சமயம் உலகம் முழுதும் அழிந்தது, அப்போது மீண்டுமொரு புதிய உலகைப் படைக்க எண்ணினார். எனவே பிரமனையும், திருமாலையும் உண்டாக்கினார். அவர்களிடம் படைத்தல் மற்றும் காத்தல் தொழிலை ஒப்புவித்தார். உடனே காத்தல் தொழிலுக்கென ஆயுதம் வேண்டினார். சிவபெருமான் தனது முக்கண்களால் சூரிய, சந்திர ஒளியைக் கொண்டு கதை ஒன்றும், சக்கரம் ஒன்றும் கொடுத்தார். உடன் பார்வதி தன்பங்கிற்கு தனது முகத்தினால் ஒரு சங்கும் கண்களால் பத்மமும் உருவாக்கி அவை தாங்குவதற்கு இருகரங்களையும் உருவாக்கிக் கொடுத்தார்.

அத்தகைய சக்கராயுதம் தோற்றதை நினைத்தவுடன் திருமாலுக்கு என்ன செய்வதென தெரியவில்லை. உடனே தேவர்களிடம் சொல்லி, சலந்தரனைக் கொல்ல உருவாக்கிய சுதர்சனம் என்ற ஆயுதத்தை சிவபெருமானிடம் இருந்து பெற தவம் செய்யப் போவதாகக் கூறினார். அவ்வாறே கடுமையான தவமிருந்தார். தினந்தோறும் ஆயிரம் தாமரைகளால் சிவபெருமானை பூஜித்தார். ஒருநாள் சிவபெருமான் ஒரு மலரை ஒளியவைத்தார். பூஜைசெய்ய வந்தத் திருமால் ஒரு மலர் இல்லாததுக் கண்டு வருந்தி தனது கண்களில் ஒன்றைப் பிடுங்கி தனது பூஜையை முடித்தார். இதனைக் கண்டு மனம் மகிழ்ந்த சிவபெருமான் அவரை கமலக்கண்ணன் என்றழைத்தார். பின் அவரது விருப்பப்படி சுதர்சனத்தை கொடுத்தார். இத்தகைய யாரையும் எதிர்க்க வல்ல சுதர்சனத்தை, திருமாலின் சிவபக்திக்காகக் கொடுத்ததால் சிவபெருமானுக்கு சக்கர தான மூர்த்தி எனப் பெயர் ஏற்பட்டது. இவரை கும்பகோணம் அருகே உள்ள திருவீழிமிழலையில் காணலாம். இங்குள்ள இறைவன் பெயர் விழிஅழகர். இறைவி பெயர் சுந்தரகுசாம்பிகை என்பதாகும். இவர்களை ஆயிரம் தாமரை மலர்களால் சிவராத்திரியில் வழிபட நாம் வேண்டிய வரங்களைத் தருவார், மேலும் வாழக்கைக்குத் தேவையான படிக்காசும் கொடுப்பார். மஞ்சள்நிறபூக்களால் அர்ச்சனையும், பழவகை நைவேத்தியமும் வெள்ளிக்கிழமையில் கொடுக்க, நீடித்த ஆயுள், கல்வியறிவு, உயர்பதவி வாய்க்கப்பெறும்.



# 55. கௌரிலீலா சமன்வித மூர்த்தி



திருக்கைலையில் சிவபெருமான் சிங்காசனத்தில் எழுந்தருளியுள்ளார். அப்போது தேவி அருகில் வந்து இறைவா எங்கும் நிறைந்துள்ள தேவருடைய உண்மை நிலையை உபதேசிக்க வேண்டும் என்றுக் கேட்டார் அதற்கவர் உருவம், அருவம், உருவஅருவத்துடன் இருப்போம் என்றார் பார்வதிக்கு விளங்காததால் விரிவாகக் கூறலானார். நானே உன்னிலும், அனைவரிடத்திலும் உள்ளோம்.
நானில்லையெனில் அனைவரும் ஜடப்பொருள் ஒப்பாவர் என்றார். அதனை விளக்க அனைத்து உயிர்களின் உள்ளத்தில் சென்று அறிவை மழுங்கடித்து ஜடப் பொருளாக்கினார், இதனால் மனம் வருந்திய பார்வதி அவரிடம் மன்னிப்புக் வேண்டி அனைவரையும் நலமுடன் அறிவைக் கொடுக்கச் செய்து, இச்செயலுக்கு பிராயசித்தமாக பார்வதி தேவியார் பூமியில் அவதரித்தார். தக்கனின் மகளாக யமுனை நதியோரத்தில் இருந்தார். அதனை தன்மகளாகக் கருதி தக்கன் வளர்க்கலானார் தாட்சாயிணிக்கு வயது ஐந்தானதும் சிவனைக் குறித்து



தவமியற்றினார். இவ்வாறு பணிரெண்டாண்டு கால கடுமையான தவம் மேற்க்கொண்டார். அவரை சோதிக்க எண்ணிய சிவபெருமான் வேதியராக வேடமிட்டு தவமிருந்த பார்வதி தேவியை மணக்க விரும்புவதாக சொன்னார். பார்வதிதேவியும் கடுமையான வார்த்தைகளால் பதிலடி கொடுத்து உள்ளம் கலங்கினார். பின்னர் சிவபெருமான் தனது சுயரூபத்தைக் காட்டினார். இவ்விஷயம் தக்கனுக்குத் தெரிந்து சிவபெருமானுக்கும் தாட்சாயிணிக்கும் நல்லநாள், நல்முகூர்த்த நேரத்தில் திருமணம் செய்வித்தார்.

திருமணம் நடைபெற்றவுடன் சிவபெருமானும், தேவர் குழாமும் மறைந்தனர், பின்னர் தாட்சாயணி தனது தவச்சாலையில் காலம் கழித்தார். பின்னர் இடபாருடராக வந்து தாட்சாயிணியை திருக்கைலை அழைத்துச் சென்றார். இதனால் தன்னை மதிக்காத சிவன்மேல் தக்கன் பெரும்கோபம் கொண்டவனாக மாறினான். இவ்வாறு திருமணம் செய்த தேவியரை விட்டு மறைந்து பின் வந்து அழைத்த மூர்த்தயே அதாவது கெளரியுடன் சிவபெருமான் விளையாடிய மூர்த்தமே கெளரிலீலா சமன்வித மூர்த்தி ஆகும்.வலங்கைமான் அருகேயுள்ளது பூவனூர் ஆகும். இங்கமைந்த இறைவன் புஷ்டவனநாதர், இறைவி ராஜராஜேஸ்வரி என்றும் அழைக்கப்படுகிறார். இங்கிருக்கும் கிருஷ்ண தீர்த்தத்தில் நீராடி இறைவனை வணங்க கருங்குஷ்டம் குணமடையும். மேலும் இங்குள்ள சாமுண்டீஸ்வரி சந்நிதியில் கொடுக்கப்படும் வேரைக் கட்ட விஷக்கடிகள் அனைத்தும் குணமாகும். இவர்க்கு மஞ்சள்நிற மலர் அர்ச்சனையும்ல பழவகை நைவேத்தியமும் நல்லெண்ணைய் தீபமும் வெள்ளிக்கிழமைகளில் கொடுக்க, நீண்ட ஆயுளும், கல்வியறிவும், உயர் பதவியும் கிட்டும்.



# 56. விசாபகரண மூர்த்தி




சிவபெருமானின் அனுமதியின்றியும் அவரை வணங்காமலும் தேவர்களும், அசுரர்களும் திருமாலின் ஆலோசனைப்படி மந்திரமலை மத்தாகவும், வாசுகி என்னும் ஆயிரம் தலை பாம்பை கயிறாகவும் கொண்டு பாற்கடலை அமுதம் வேண்டிக்கடைந்தனர். திருமால் ஆமை உருவம் கொண்டு மந்திரமலையின் அடியை முதுகாலும், கைகளாலும் தாங்கினார். ஆனாலும் கடைதல் தொடர்ந்து நடைபெற்று வரவே ஒருக்குறிப்பிட்டக் காலத்திற்கு பின்னர் வாசுகி என்றப் பாம்பு வலிதாளாமல் அதன் ஆயிரம் தலை வழியே கடுமையான, கொடுமையான ஆலகால விஷத்தைத் துப்பியது, அவ்விஷமானது அனைத்து இடங்களிலும் பரவ அது கண்ட திருமால் அதை அடக்க சென்றார். ஆனால் அவ்விஷத்தின் கடுமை அவரது மேனியைக் கருக்கியது, அதனால் அவர் ஓடினார். பின்னர் அனைத்து தேவர் குழாமும் கைலை சென்று நந்திதேவரின் அனுமதியுடன் சிவனை



தரிசித்தனர். திருமாலின் மாறுவேடத்தைக் கண்ட சிவபெருமான் அவரிடம் இந்தக் கோலத்திற்கான காரணம் வேண்ட அனைவரும் பாற்கடல் விஷயத்தைக் கூறினார். பார்வதி தேவியும் அவர்களைக் காக்குமாறுக் கூறினார். பின்னர் சுந்தரர் கொண்டு வந்த விஷத்தை உண்டார். அது தொண்டைக் குழிக்குள் சென்றதும் அதை அங்கேயே நிறுத்தினார். ஆகவே அவரது பெயர் நீலகண்டன், சீசகண்டர் என்றாயிற்று. இதற்குப் பின்னர் சிவபெருமானின் அனுமதியுடன் பாற்கடலைக் கடைய அதிலிருந்து அமுதமும், இன்னபிற பொருள்களும் வந்தது. திருமால் மோகினியாகி அசுரர்களை வஞ்சித்து தேவர்களுக்கு அமுதம் கொடுத்தார். அதன்பின் அவரவர் அவரவரர் பதவியில் சென்று அமர்ந்தனர்.

அனைத்து உயிர்களையும் காக்கும் பொருட்டு ஆலகால விஷத்தை உண்டு அனைவரயும் காத்ததால் சிவபெருமானுக்கு விசாபகரண மூர்த்தி என்றப் பெயர் ஏற்பட்டது. இவரை தரிசிக்க நாம் செல்ல வேண்டியது சென்னை-ஆந்திரா எல்லையிலுள்ள சுருட்டப் பள்ளியாகும். பொதுவாக பெருமாள் பள்ளிக்கொண்ட நிலையில் பார்த்திருப்போம். இது சிவபெருமான் பள்ளிக் கொண்ட தலமாகும். இங்கு பிரதோஷம் பார்க்க மிக்கச் சிறப்புடையது. இவரருகே பார்வதி தேவியிருக்கின்றார். இவர் விஷம் உண்டதால் ஏற்பட்ட மயக்கத்தினால் இவ்வாறிருக்கிறார். இவர்க்கு செவ்வரளி அர்ச்சனையும், முக்கூட்டு எண்ணெய் என்றழைக்கப்படும் நெய், தேங்காய், எள் நைவேத்தியமும், செவ்வாய் அன்றுக் கொடுக்க விஷ பயம் தீரும், நீள் ஆயுள், குடும்ப அமைதி ஓங்கும். இவரை தரிசிக்க தமிழக அரசு சுற்றுலாப் பேருந்துகளை இயக்குகிறது.



# 57. கருடன் அருகிருந்த மூர்த்தி



ஐம்படைகளையும் கையில் ஏந்திக் கொண்டும் பாற்கடலில் தன்தேவியருடனும், பாம்பாணையில் அமர்ந்திருக்கிறார் திருமால். இவர் தேவராலும் போற்றப்படவர் இவர்க்கு ஒருமுறை சிவதரிசனம் செய்ய வேண்டி தனது வாகனமான கருடன் மீதேறி வான்வழியே சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கைலைச் சென்றார். அங்கே நந்தி தேவனின் அனுமதியுடன் உட்சென்றார். கருடன் வெளியே இருக்கலானான். உள்ளே சிவனார் நீலகண்டமும், முக்கண்களுடன், மான் மழு, வரத, அபய முத்திரை கொண்ட சதுர்புஜங்களுடன், கங்கையில் கொன்றை மலரை அணிந்து சடாமுடியுடன் அர்த்தநாரீஸ்வரராக நவரத்தினங்கள் இழைக்கப்பட்ட மேடையில் வீற்றிருக்கிறார். இக்காட்சியைக் கண்ட அனைவரும் அவரை ஆராதித்தனர். திருமால் உட்சென்று நெடுநேரமாகியும் திரும்பவராததால் கருடன் உட்செல்ல முயன்றது, அதற்கு நந்திதேவர் அனுமதி கொடுக்கவில்லை. இதனால் கோபம் கொண்ட கருடன் நந்திதேவரைப் பார்த்து என்னை தடுக்க நீயார், நீயே



சுடலையாடியின் வாகனம், உன்னை விரைவில் கொல்வேன் என்றது. இதனைக் கேட்ட நந்திதேவர் ஆழ்ந்து தன் மூச்சை இழுத்தும், வெளியிட்டும் வந்தது. அக்காற்றில் அகப்பட்ட கருடன் நிலைத் தடுமாறியது. திருமால் தான் தன்னைக் காப்பவரென்னி இறைவா பாற்கடல் வண்ணா என்னைக் காக்க வேண்டும் என்றுக் குரல் கொடுத்தது. சிவதரிசனம் செய்து கொண்டிருந்த திருமாலின் காதில் விழ, அவர் சிவபெருமானிடம் வேண்டினார். கருடனை மன்னித்து நந்திதேவர் வெளியிடும் படி அதற்கு செவி சாய்த்த சிவபெருமான் நந்திதேவருக்கு கட்டளையிட்டார். சிவபெருமானின் கட்டளைக்கு குற்றுயிரும் குலையுயிருமான கருடனை விடுவித்தார். கருடன் தன் கர்வம் அடங்கி பின் பழையபடி திருமாலுடன் பாற்கடல் சென்றது. நந்திதேவரால் துன்புற்ற கருடனுக்கு உதவியதால் சிவபெருமானுக்கு கருடன் அருகிருந்த மூர்த்தி என்ற பெயர் ஏற்பட்டது.

குடந்தை - ஆவுர் செல்லும் வழியில் உள்ளது பட்டீஸ்வரம். இறைவன் பெயர் பட்டீஸ்வரநாதர் இறைவி பெயர் பல்டனைநாயகி யாகும். இங்கு நந்தியனைத்து சிறிது விலகியவாறு அமைந்துள்ளது. என்னக் காரணமெனில் சம்பந்தர் வெளியே நின்றவாறு வழிபட நந்தி வழிவட்டு விலகியது என்றுக் கூறுவர். இறைவனுக்கு தும்பை மலர் அர்ச்சனையும் வெண்பொங்கல் நைவேத்தியமும் சனிக்கிழகைளில் கொடுக்க செல்வ செழிப்புண்டாகும். புகழ், அறிவு சார்ந்த மதிநுட்பம் கிடைக்கும்.



# 58. பிரம்ம சிரச்சேத மூர்த்தி




மேருமலையில் இருக்கின்ற உயர்ந்த சிகரமொன்றில் திருமாலும், பிரம்மனும் வீற்றிருக்கின்றனர். அப்போது எண்ணற்ற முனிவர்களும், தேவர்களும் அங்குவந்து இருவரையும் தாழ்மையுடன் வணங்கி அவர்களிடம் உலக உயிர்கள் அனைத்தின் மனதிலும் இருப்பவர் உங்களில் யாரென்றுக் கூறுங்கள் என்றுக் கேட்டனர். இச்செய்தியால் கர்வம் கொண்ட திருமாலுக்கும், பிரம்மனுக்கும் தானே அனைவர் மனதிலும் இருப்பவன் என்ற ரீதியில சண்டை ஏற்பட்டது, இதனைக் கண்ட முனிவர்களும் தேவர்களும் நழுவினர். அவர்கள் அங்கிருந்து சென்ற பின்னும் சண்டைத் தொடரவே வேதமும், பிரணவம் உங்களில் இருவரும் பெரியவர் அல்ல, சிவபெருமானே பெரியவர் என்றது. மீண்டும் கேளாமல் சண்டை நீண்டது, இதனையறிந்த சிவபெருமான் ஜோதி வடிவத்துடன் அங்கே வந்து அதன் நடுவே தம்பதி சமேதராய் திருக்கைலையில் அமர்ந்திருக்கும் கோலத்தைக் காட்டினார். இதனைக் கண்ட திருமால் சிரம் தாழ்த்தி வணங்கி தோல்வியை ஒப்புக் கொண்டு



சிவபெருமானை துதித்தார். ஆனால் பிரம்மனோ கர்வமடங்காமல் தன்னுடைய நடுத் தலையால் சிரம் சிவபெருமானை இகழ்ந்துப் பேசினார். இதனைக் கண்ட சிவபெருமான் அவரது கர்வத்தை அழிக்கவென்னி பைரவரை நினைத்தார். பைரவர் வந்தவுடன் பிரம்மனின் நடுத்தலையை தன் நக நுனியால் கிள்ளியெடுத்து தன் கைகளில் ஏந்தியபடி அனைத்து தேவர் முனிவர்கள் இருப்பிடம் சென்று இரத்தப் பிச்சைக் கேட்டார். இரத்தம் கொடுத்து மயங்கிய பிரம்மாவை எழுப்பி அவர்கள் கர்வத்தை அடக்கினார். பின்னர் பிரம்மன் தன்னுடைய கர்வம் பைரவரால் அழியப் பெற்றார். சிவபெருமானை தவறாகப் பேசியதற்காக மன்னிப்பு வேண்டினார். பின் அவரை பலவிதமாகப் பாடித் துதித்து வழிபட்டார். அந்த சிரச்சேதம் செய்த தலை சிவபெருமானிடமே இருந்தது. இதனால் பிரம்மன் நான்முகன் என்றும் சதுர்முகன் என்றும் பெயர் பெற்றார். பிரம்மனின் கர்வத்தை அடக்க ஐந்தாவது தலையை நகநுனியால் கிள்ளியதால் சிவபெருமானுக்கு பிரம்ம சிரச்சேத மூர்த்தி என்றப் பெயர் ஏற்படலாயிற்று. இவரை வழிபட திருக்கண்டியூர் செல்ல வேண்டும். இத்தலம் திருவையாறு அருகே அமைந்துள்ளது. இறைவனது திருநாமம் பிரம்மநாதர் என்றும் இறைவி மங்களநாயகி என்றும் வணங்கப் படுகின்றார். இங்கமைந்த பிரம்ம தீர்த்ததில் மூழ்கி இறைவனுக்கு வில்வார்சனை செய்ய பிரம்மஹஸ்தி தோஷம் விலகும். தோல் சம்பந்தப்பட் வியாதிகள் குணமடையும்.

மாசிமாத 13,14,15 ஆகிய தேதிகளில் மாலை 5.45-6.15 வரை சூரிய ஒளி இறைவன் மீதுப்படுவது சூரியனே இவரை வணங்குவதாகக் கூறப்படுகிறது. அச்சமயத்தில் நாமும் அவருடன் வழிபட சூர்ய சம்பந்தமான தோஷம் விலகும். இவர்க்கு குவளைமலர் அர்ச்சனையும், சக்கரைப் பொங்கல் அல்லது கொண்டைக் கடலை நைவேத்தியம் சனி அல்லது திங்களன்று கொடுக்க திருமணம் கைகூடும் தொழிலில் முன்னேற்றமும், பகைவர் தொல்லையும் தீரும்.



# 59. கூர்ம சம்ஹார மூர்த்தி




ஒரு காலத்தில் அசுரர்களுக்கும், தேவர்களுக்கும் தீராத சண்டை நடைபெற்றுக் கொண்டிருந்தது. இதனால் இருதரப்பிலும் எண்ணற்ற உயிர்சேதம் ஏற்பட்டது. இதனால் தேவர்கள் பாற்கடலைக் கடைந்து அமுதம் உண்டால் நீண்ட காலம் வாழலாம் என்ற யோசனையை பிரமனிடம் கூறினர். பிரமன் திருமாலிடம் கூற அவரது துணையுடன் பாற்கடலைக் கடைந்தனர். இருதரப்பிற்கும் ஈடு கொடுக்க முடியாமல் மந்திரமலை ஆடியது. இதனால் திருமால் மலையின் அடியில் சென்று ஆமையாகி மலையைத் தாங்கினார். இதனால் விஷம் வந்து, அதை சிவபெருமான் உண்டது வரை அனைவரும் அறிந்ததே. விஷம் வரக்காரணம் சிவனை வணங்காதது என்று உணர்ந்தோர் அவரை வணங்கினார். இவனது ஆசியுடன் அமுதம் கடைய சென்றனர். இப்பொழுதும் ஆமை வடிவம் தாங்கிய சிவபெருமான் மலையைத் தாங்கினார். அமிர்தமும் வந்தது. அதனைத் தொடர்ந்து



பல அறிய பொருட்களும் வெளிவந்தது. அமிர்தத்தை தேவர்கள் மட்டும் அடையும் நேரத்தில் திருமால் மோகினியாக மாறி அசுரர்களை ஏமாற்றி அமிர்தத்தை தேவர்களுக்குக் கொடுத்தார். இச்செய்தி அறிந்த அசுரர்கள் இருவர் தேவர்போல் வேடமிட்டு அமிர்தம் உண்டனர். இவ்விசயத்தை சூரிய, சந்திரர்கள் திருமாலிடம் சொன்னார்கள். திருமால் மிக்கக் கோபத்துடன் கையில் இருந்த அகப்பையால் அவர்களை இரு கூறாக்கினார். அவர்கள் அமுதம் உண்ட பலனால் இறக்காமல், சிவபூஜை செய்து ராகு, கேது கிரகங்களாக உருமாறி இன்றளவும் தன்னைக் காட்டிக் கொடுத்த சூரிய, சந்திரர்களைப் பிடித்து வாட்டுகின்றனர். இதனிடையே மந்திமலையைத் தாங்கியபடி நின்ற (திருமால்) ஆமை ஏழு சாகரங்களையும் ஒன்றிணைத்தது. அதன் வெள்ளம் உலகத்தை உலுக்கியது. பின் கடல் உயிரினங்கள் அனைத்தையும் தின்றது. பசி நீங்காததால் கடல் நீரையும் குடித்து சேற்றையும் உண்டது. ஆமை அனைத்தையும் உண்டது. இதனால் சந்திர, சூரியர் கடலில் சென்று மறைய பயந்து வேறொங்கோ ஒளிந்துக்கொண்டனர், இருளின் பிடியில் உலகம் அமிழ்ந்தது, இதனால் உலகமாந்தர்களும் தேவர்களும் சிவபெருமானை அடைந்து அபயம் வேண்டினர். ஆமையை அழிக்குமாறு கூறினார். உடனே சிவபெருமான் தன்னுடைய சூலாயுதத்தினால் அவ்வாமையின் உடலைக்குத்தி அதன் இறைச்சியை வழித் தெடுத்தார். பெருமானே அதன் ஓட்டை ஆபரணமாக்க வேண்டுமெனத் தேவர்கள் விரும்பினர். அவர்களின் விருப்பப்படி தன் திருமார்பில் இருந்த பிரமனின் தலைமாலையின் நடுவே யொருத்தி இணைந்தார். திருமால் மனம் வருந்தி மன்னிப்பு வேண்டினார். திருமாலாகிய ஆமையைக் கொன்றதால் சிவபெருமானுக்கு கூர்ம சம்ஹார மூர்த்தி என்றப் பெயர் ஏற்பட்டது.

சென்னையிலுள்ள பாரிமுனைக்கருகே அமைந்துள்ள கச்சாளீஸ்வரர் கோயிலில் இவரது வரை ஓவியம் காணப்படுகின்றது. அங்கு சிவமூர்த்திகளின் ஓவியம் நிறையக் காணப்படுகின்றது. இவர்க்கு வில்வார்ச்சனையும், சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியமும், திங்களன்றுக் கொடுக்க நீர் கண்டம் மறையும் பயம் விலகும். தம்பதியர் ஒற்றுமைப் பெருகும்.



# 60. மச்ச சம்ஹார மூர்த்தி



சோமுகாசுரன் மூன்று லோகத்தினராலும் அழிக்க முடியாத வரத்தினை சிவபெருமானிடமிருந்துப் பெற்றிருந்தான். அந்த அகந்தையில் பிரமனிடம் சென்று வேதங்கள் நான்கையும் பிடுங்கிக் கொண்டு கடலிலுள் சென்று மறைந்தான். பிரமன் திருமாலிடம் நடந்தவற்றை கூறினான். திருமாலும் பெரிய மீன் வடிவம் ஏற்றார். கடலிலுள் சென்று சோமுகாசுரனைத் தேடிக் கடலையேக் கலக்கியது. பின்னர் ஒளிந்திருந்த சோமுகாசுரனை கண்டுபிடித்து அவனை துன்புறுத்திக் கொன்றது. அவனிடமிருந்து பறிக்க வேதங்களை மீண்டும் பிரமனிடம் சேர்ப்பித்தது. ஆனாலும் சோமுகனின் உடலிருந்து வெளிவந்த இரத்தம் சமுத்திரத்தை செந்நிறமாகக்கியது. பின் பெரிய மந்தரம் போன்ற அந்த மீன் கடலை இடித்தபடி கொள்ளாமல் திசை நான்கிலும் பரவி நிரம்பியிருந்தது. அது அங்கிருக்கும் அனைத்து மீன்களையும் அழித்து தின்றது. ஒரு கடல் விலங்கினங்களையும் கூட விடாமல் அனைத்தையும் கொன்று தின்றது.



இச்செய்தி தேவர்கள் மூலமாக சிவபெருமானை எட்டியது. சிவபெருமானும் தேவர்களுக்கு ஆறுதல் கூறி அக்கொடிய மீனை பிடிக்க வேண்டிய வேலையுடன் மீனவர் போல் உருமாறி அக்கடலில் அம்மீனிற்கு தக்கவாறு உருவம் கொண்டு நின்றார். வலைவீசி அப்பெரிய மீனைப் பிடித்தார். பின்னர் அதன் கண்னை தோண்டி தன் மோதிரத்தில் பதித்துக் கொண்டார். இதனால் கண்ணிழந்த மீன் வடிவம் கொண்ட திருமால் சிவபெருமானிடம் தன் பழைய உருவைத் தருமாறுக் கேட்க, அவரும் தந்து ஆசி கூறினார். தேவர்களின் வேண்டுகோளின்படி அட்டூழியம் செய்த மீனை அழிக்க சிவபெருமான் எடுத்த உருவமே மச்ச சம்ஹார மூர்த்தி யாகும். இவரை காஞ்சிபுரத்துக் கோயிலில் தரிசிக்கலாம். அங்கு கல் தூணில் இவ்வுருவம் செதுக்கப்பட்டுள்ளது. இவர்க்கு வில்வார்ச்சனையும், புளிசாத நைவேத்தியமும் செவ்வாய் அன்று கொடுத்து, எள் தீபமிட தொழில் விருத்தியடையும். பல புதியத் தொழில்கள் தோன்ற ஏதுவாகும்.



# 61. வராக சம்ஹார மூர்த்தி




இரணியாக்கன் எனும் அசுரன் பிரமனை நோக்கி தவமிருந்தான், அவனது தவத்திற்கு மெச்சிய பிரமன் அவன் கேட்ட அனைத்து வரங்களையும் கொடுத்தார். இதனால் அந்த அசுரன் உலகை பாய்போல் சுருட்டி கடலில் சென்று மறைந்தான். தேவர்கள் இதனால் செய்வதறியாது திகைத்தனர். பின் திருமாலிடம் முறையிட்டனர். திருமாலும் அனைவரது ஆசியுடன் கருடவாகனத்தில் சென்று வைகுண்டம் தாண்டியதும் வராக உருவம் கொண்டார். அது மலையை விட உயரமாகவும். ஒவ்வொரு காலுக்கிடையே ஆயிரக்கணக்கான கிலோமீட்டர் இடைவெளியும். அதன் வால் அசைவு எட்டுத் திக்கையும் தொட்டு அதன் மூச்சுக்காற்றின் வெப்பத்தினால் உலகமே குலுங்குகிறது. இப்படியாக பயங்கரமான உருவம் கொண்ட திருமால் கடலையே பிரட்டிப்போட்டு அசுரனைக் கண்டுபிடித்தார். அவனை தன் கொம்பினால் கொன்று, உலகை மீட்டு ஆதிசேஷனிடம் ஒப்படைத்தார். பின் அவ்வராகம் பெரும் கர்வமுடன் எதிர்வந்த



அனைத்து உயிர்களையும் கொன்று தின்றது. இதன் கொடுமை நாளுக்கு நாள் அதிகமாகவே பயந்த தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட, அவர்களின் வேண்டுகோளுக்கு இசைந்த அவர் வேட வடிவம் கொண்டு வராகத்தை தன் சூலாயுதத்தால் கொன்று, அதன் ஒரு கொம்பொடித்து தன்மேனியில் ஆபரணமாக்கினார். அதனால் வராகத்தின் அகந்தை ஒழிந்தது. சிவபெருமானிடம் மன்னிப்பு வேண்டியது. இதனால் அதனுடைய மற்றொரு கொம்பு பிழைத்தது. பின்னர் சிவனருளால் வராக உருவம் நீங்கி பழைய உருவம் அடைந்ததும் அனைவருக்கும் வராக புராணம் கூறி வைகுந்தம் சென்றார். திருமால் தேவர்கள் துயர்துடைக்க வராகத்தை அழிக்க சிவபெருமான் கொண்ட கோலமே வராக சம்ஹார மூர்த்தி யாகும். இவரை காசியிலும், தமிழகத்திலும் உள்ள பழமலைக் கோயிலிலும் காணலாம். இவர்க்கு புதன்கிழமைகளில் நெய்விளக்கும், சர்க்கரை பொங்கல் நைவேத்தியமும் கொடுக்க வியாபாரம் கொழிக்கும் பகைவர் பார்வையால் வளம் பெருகும்.





# 62. பிரார்த்தனா மூர்த்தி




தாருவன முனிவர்கள் தவமும், யாகமுமே முக்தி கிடைக்கக் கூடிய வழியென நினைத்திருந்தனர். அவர்கள் சிவபெருமானை வணங்காது செருக்குடன் இருந்தனர். அவர்கள் செருக்கை அழிக்க சிவபெருமான் பிட்சாடனராக மாறி முனிவர்களின் மனைவியர் கற்பையும் (பிறஆடவனின் அழகை நினைப்பதே) அழித்தார். திருமால் மோகினி அவதாரத்துடன் முனிவர்களின் தவத்தை அழித்தார். இதற்கெல்லாம் யார்காரணமென தவவலிமையால் முனிவர்கள் உணர்ந்தனர். உடனே அப்சார வேள்வி நடத்தி அதிலிருந்து வெளிவந்த பொருட்கள் அனைத்தையும் சிவபெருமான் மீது பிரயோகித்தனர். முயலகன் என்ற அசுரனும் சிவபெருமானை நோக்கி வர அவனது முதுகில் ஏறி நடனமாடி முனிவர்களுக்கு ஞானமளித்தார். இச்செய்தியைக் கேள்வியுற்ற உமாதேவியார் வருந்தினார். தாமே சக்தியாக உள்ளோம். அவர் என்னை விடுத்து திருமாலை மோகினியாக்கிச்



சென்றுவிட்டாரென்ற செய்தியைக் கேட்டதும், ஓர் திருவிளையாடல் நடத்த எண்ணி ஊடல் கொண்டார்.

இதனையறிந்த சிவபெருமான் சக்தியின் ஊடலுக்கான காரணத்தை அறிந்தும், அதனைப் போக்க நினைத்தார், அவர் சக்தியிடம் சென்று தேவி எனது ஒரு சக்தியான நீயே செய்கின்ற வேலையைப் பொறுத்து நான்காகப் பிரிகிறாய். அதாவது நீயாகவும், திருமாலாகவும், காளியாகவும், துர்க்கையாகவும் பிரிகின்றிர்கள். என் மனைவியாக கையில் நீயும், ஆணுருவம் கொள்கையில் திருமாலாகவும், யுத்தக் களத்தில் துர்க்கையாகவும், கோபத்தில் காளியாகவும் உருமாறுகின்றீர்கள். எனவே திருமால், காளி, துர்க்கை இவர்கள் அனைவரும் நீயே என்பதை உணர்க என்றார். உடன் உமாதேவியார் கோபம் மறைய இறைவா தாருகாவனத்தில் நீர் ஆடிய அத்திருநடனத்தை நான் காண வேண்டும். எனக்கு ஆடிக்காட்டருள வேண்டும் என்று பிரார்த்தித்தார். உடன் சிவபெருமானும் ஆடிக் காட்டினார் இந்த நடனத்தையே கௌரி தாண்டவம் என்றழைப்பர். தனது ஊடலுக்கு பலமுறை இறைவனிடம் மன்னிப்பு வேண்டினார். இறைவனும் மன்னித்து தன்னுள் ஐக்கியப்படுத்தினார். சிவபெருமான் உமாதேவியின் ஊடலுக்கான காரணத்தை விளக்கியதாலும் அவர் நடனம் காண பிரார்த்தித்தமையால் திருநடனத்தை மறுபடியும் அவர் முன் நிகழ்த்திக் காட்டினார். இம்மூர்த்தியே பிரார்த்தனா மூர்த்தி ஆவார். இவர்க்குரியத் தலமாக ருத்ரகங்கை குறிப்பிடப்படுகிறது. இவர்க்கு வெண்தாமரை அர்ச்சனையும், நைவேத்தியமாக சர்க்கரை பொங்கலும் புதன் அன்று கொடுத்து, நெய் தீபமிட்டால் திருமணத்தடை விலகி திருமணம் கைக்கூடி வரும் வேண்டிய செல்வமனைத்தும் கிடைக்கும்.



# 63. இரத்த பிட்சா பிரதான மூர்த்தி



சிவபெருமானை பார்த்து ஏளனமாய் சிரித்த நான்முகனின் நடுத்தலையை பைரவர் தன்னுடைய நகத்தினால் திருகி எடுத்தார். அதன் பின்னர் அவருடைய ஆணைப்படி அவரால் உருவாக்கப்பட்ட அதிபலன், ஆலகாலன், கனன்முகன், காலவேகன், சோமகன் போன்ற கணத்தலைவர்களுடன் வனம் சென்று அங்கிருந்த முனிவர்கள், ரிஷிகள், தவசிகள் இவர்களிடமிருந்து இரத்தத்தை தன்னுடைய சூலாயுதத்தால் குத்தி அதனால் வழிந்த இரத்தத்தைக் கபாலத்தில் பிடித்தார். பின்னர் தேவலோகம் சென்று தேவர்களின் இரத்தத்தைப் பிடித்தார். இதனால் இறந்தவர்களை உயிர்பித்து அவர்களின் செருக்கை அழித்தார். அவர்கள் அடுத்து சென்ற இடம் வைகுந்தம். அங்கே தன்னையும், கணத்தலைவர்களையும் தடுத்த திருமாலின் முழுமுதற்காவலனான விடுகசேனனை சூலாயுதத்தால் கொன்றார். தன் தோள் மீது போட்டார். பின்னர் தேவியர் படை சூழ பாம்பணையில் பள்ளிக்



கொண்டிருந்த திருமாலின் முன் பைரவர் தனது கணத்தலைவர்களுடன் சென்று திருமாலிடம் இரத்தப் பிட்சை ஏற்க வந்ததைச் சொல்ல சந்தோஷத்துடன் திருமால் தனது நகத்தினால் நெற்றியியை கீறி ஒரு ரத்த நரம்புருவி அதிலிருந்து சொட்டிய இரத்தத்தை கபாலத்தில் விட்டார்.

இவ்வாறாக ஆயிரம் ஆண்டுகள் இரத்தம் கொடுத்தும் பைரவரின் பிட்சா பாத்திரம் நிறையவில்லை, இதனால் திருமால் பலவீனமடைந்து மயங்கினார். இதனைக் கண்ணுற்ற அவன் தேவியர் திகைக்க, பைரவர் அவர்களைத் தேற்றி திருமாலை எழச்செய்தார். பின்னர் திருமாலின் வேண்டுகோளின்படி வடுகசேனனை மறுபடி உயிர்பித்தார். இவ்வாறு முனிவர், ரிஷிகள், தவசிகள், தேவர்கள், திருமால் போன்றோரிடம் இரத்தம் பெற்றதற்குக் காரணம் அவர்களுடைய அகந்தையையும், கர்வத்தையும் அழிப்பதற்குத்தானே ஒழிய வேறில்லை. இவ்வாறு அவர்களின் அகந்தையை ஒழிக்க பிட்சையாக பெற்ற சிவபெருமானுக்கு இரத்த பிட்சா பிரதான மூர்த்தி என்ற பெயர் உண்டாயிற்று. இவரை தரிசிக்க நாம் செல்லவேண்டிய தலம் காசியாகும். இங்குள்ள விஸ்வநாதர்க்கு செவ்வரளி அர்ச்சனையும், வாழைப்பழ நைவேத்தியமும், எள் தீபமும் செவ்வாய்கிழமைளில் கொடுக்க விளக்கிட பகைவர் தொல்லை மறையும். நாம் செய்த பாவங்கள் கங்கையில் மூழ்கி பின் விஸ்வநாதரை தரிசிக்கத் தீரும்.



# 64. சிஷ்ய பாவ மூர்த்தி



தமிழ்க்கடவுள் எனவும், தமிழர் கடவுள் எனவும் போற்றப்படுபவன் முருகபெருமான். தேவர்களைத் துன்புறுத்தி வந்த சூரபத்மனை அழித்தார் முருகபெருமான். முருகன் வேறு சிவசக்தி வேறல்ல. அவரே இவர். இவரே அவர். ஆறிற்கும் ஆறுமுகனுக்கும் நிறைய ஒற்றுமை உண்டு. ஆறுமுகம் கொண்டவன், ஆறு எழுத்து கொண்டவன், ஆறு கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டவன், வளர்பிறை சஷ்டி அவனுக்கு உகந்த நாள். இப்படி அனைத்தும் ஆறு மயம் தான். ஒருமுறை கைலைக்கு பிரமன் வந்தான். அப்போது அகந்தை மேலிட குமரனை வணங்காமல் சென்றான். குமரன் பிரமனை அழைத்து அவன் யாரென்றும், செய்யும் தொழில் என்னவென்றும் கேட்டான். பிரமனும் நான் படைப்புத் தொழில் புரிபவன் என்றான். குமரனும் படைப்புத் தொழிலை எவ்வாறு செய்வாய் என்றான், வேதம் ஓதி செய்வதாகக் கூறினான். வேதம் ஓதுக என்றான் குமரன் பிரமனும் ஓம் என்று படித்தொடங்கினான். உடன் குமரன் பிரமனை நோக்கி இப்பொழுது நீர்



கூறிய பிரணவத்தின் பொருள் கூறுக என்றான். பிரமன் பிரணவத்தின் பொருள் தெரியாது விழிக்க, பிரணவத்தின் பொருள் தெரியாத நீயெல்லாம் எவ்வாறு படைப்பை மேற்கொள்வாய் என்றபடியே பிரமனை சிறையில் அடைத்தான் இதனைக் கேள்வியுற்ற சிவபெருமான் குமரனிடம் வந்து குமரா நீ பிரணவத்தின் பொருளை அறிவாயா அப்படியெனில் எனக்கு கூறு என்றார். உடன் குமரனும் முறைப்படிக் கேட்டால் கூறுவதாகச் சொன்னான். உடனே சிவபெருமான் சீடராக மாறி கேட்க, குமரனோ குருவாக மாறி உபதேசித்தான். அப்பிரணவத்தின் பொருள் செவிகளில் தேனாய் இனித்தது. (அதன் பின்னர் பிரமன் சுவாமிமலை சென்று சிவபூஜை செய்து அவர் மூலமாக முருகபெருமான் பொருளுரைக்க பிரமன் அறிந்தார்) அதாவது (தந்தைக்கே) தகப்பனுக்கே சுவாமியாக அதாவது குருவாக இருந்து பிரணவத்தின் பொருள் உரைத்ததால் குமரனுக்கு தகப்பன் சாமி எனப் பெயர் ஏற்பட்டது. சிவபெருமான் சிஷ்யராகவும், குமரன் குருவாகவும் உபதேசம் கொடுத்ததால் இம்மூர்த்திக்கு சிஷ்ய பாவ மூர்த்தி என்றப் பெயர் உண்டாயிற்று.

சுவாமிமலை குடந்தையருகே அமைந்துள்ளது. இத்தலத்திலேயே தந்தைக்கு உபதேசக் காட்சி நடைபெற்றது. என இத்தல இறைவனை வணங்க கல்வி மேம்பாடு அடையும். மேலும் இவர்க்கு வில்வார்ச்சனையும், சர்க்கரைப்பொங்கல் நைவேத்தியமும், திங்கள்ல செவ்வாய்களில் கொடுத்து நெய்விளக்கிட கல்வி சிறப்படையும் நீள் ஆயுள் உண்டாகும். அறிவு மேன்மையடையும்.

